Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.

# தியாக பூமி

டாக்கியைச் சென்னை மாகாணத்தில் காட்டக்கூடா தென்று சர்க்கார் சென்ற வாரத்தில் தடை உத்திரவு போட்டிருக்கிறார்கள்.

வெளியாகி ஏழு வருஷமான அந்தப் படத்தில் சர்க்கார் பயப்படும் படியாக அப்படி என்னதான் இருக்கும்?

## "தியாக பூமி" -

கதையைப் படித்து ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்.

## "தியாக பூமி" -

புத்தகத்தின் இரண்டாம் பதிப்பு இப்போது அச்சில் இருக்கிறது. சீக்கிரத்தில் வெளியாகும்.

ரா. கிருஷ்ணமூர்த்தி,
"கல்கி" காரியாலயம்,
கீழ்ப்பாக்கம் - சென்னை



"சுயமாகவே வெளுக்கும் நுரை" ஆடைகளைக் காப்பாற்றக் கூடியதா?

சன்லைட் சோப் தயாரிக்கும் ரசாயனசாலையில் வேலை செய்யும் ஒருவர் சொல்லுகிறார் . . .

"ஆடைகளைக் காப்பாற்றுமா"? அதுதான் சன்லைட் சோப் நுரையின் முக்கிய வேலை. அழுக்கடைந்த ஆடைகளிலிருந்து அழுக்கை தானாகவே எடுக்கக் கூடிய சக்தியுடையது. வஸ்திரங்களை கல்லின் மேல் அடித்து துவைக்க வேண்டியதில்லை. ஆகையால் ஆடைகள் நைந்து போகாது. சுயமாக வெளுக்கும் நுரையிலுள்ள சுயசக்தியானது அழுக்கை நன்றாக கரைத்துவிட்டு ஜலத்தில் ஆடைகளை அலசினவுடன் அழுக்கைப் போக்கிவிடுகிறது."




# சன்லைட் சோப்

## சுயமாக வெளுக்கும் நுரை உடையது

S. 67-33 TM

ஒரு லீவர் பிரதர்ஸ் தயாரிப்பு


வைரம்
பொன்
வெள்ளி
நகைகளுக்கு
P.A. ராஜ செட்டியார் பிரதர்
தந்தி: ராஜா-கோயமுத்தூர்-போன். 218A








# பட்டசிலேவாங்கும் பொழுது அஜாக்ஸை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்




பிளின்ட் (ஸான்ட்)
கார்னெட்
எமரி
அஜாக்ஸைட் பேப்பர்
க்ளாத்
டிஸ்க்ஸ்
ரோல்ஸ்
பெல்ட்ஸ்
டேப்ஸ்
மற்றுமுள்ளவைகள்.

மரத் தொழிலில் பட்டசிலேகள் மிக முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. கடைசி மெருகு வேலேக்கு மிகவும் அவசியமானபடியால் விஷயமறிந்தவர்கள் அஜாக்ஸ் பட்டசிலேயையே வாங்குகிறார்கள். நேர்த்தியான ஜோடிப்புகளுக்கும் மர சாமான்களுக்கும் அஜாக்ஸ் பட்டசிலேகளேயே உபயோகப்படுத்துங்கள்.

## அஜாக்ஸ்

பிராடக்ட்ஸ் லிமிடெட்.
106, அரமனேக்கார தெரு,
சென்னே.

மானேஜிங் ஏஜண்டுகள் : முருகப்பா & சன்ஸ்

தென் இந்தியாவுக்கு விற்பனே ஏஜண்டுகள் :

மார்ஷல் ஸன்ஸ் & கோ., (இந்தியா) லிமிடெட்,
தபால் பெட்டி 141 : : : : சென்னே.

A. S. K. 9.

களும் என் சுவாதீனத்திலிருக்கச் செய்திருக்கிறேன். நீர் நயமாகச் சொல்லிப் பாண்டவர்களை வாரணாவதம் அனுப்பி விட்டால், பிறகு நகரமும் நாடும் நம்முடைய முழு சுவாதீனமாகும். எல்லாரும் நம்முடைய கட்சிக்கு வந்து விடுவார்கள். இராஜ்யம் நன்றாக நம்முடைய கையில் நிலையாக நிலைத்த பிறகு, பாண்டவர்கள் திரும்பி வரலாம். அப்போது நமக்கு அவர்களால் அபாயம் ஏதுமில்லை."

திருதராஷ்டிரன் மனஉறுதி இழந்து மகனுடைய ஆலோசனைக்குச் சம்மதித்தான். வேண்டிய ஏற்பாடு நடந்தது. பாண்டவர்களுடைய காதில் விழும்படி வாரணாவத நகரத்தின் அழகைப் பற்றி மந்திரிகள் பேசலானார்கள். அவ்விடம் சிவபெருமானுக்குப் பெரிய உத்ஸவம் மிகச் சிறப்பாக நடக்கும் என்பதையும் எடுத்துச் சொன்னார்கள். அங்கே போகவேண்டும் என்று பாண்டவர்கள் மனதில் எண்ணம் உண்டாகும்படி செய்தார்கள்.

"கட்டாயம் போய் உத்ஸவத்தைப் பார்த்து விட்டு வாருங்கள். அவ்விடமுள்ள ஜனங்களைப் பார்த்துத் திருப்தி செய்து வாருங்கள்" என்று திருதராஷ்டிரனும் மிக்க அன்பு பாராட்டுவதைப் போல் சொன்னான். பீஷ்மர் முதலிய பெரியோர்களிடம் விடை பெற்றுக் கொண்டு பாண்டவர்கள் வாரணாவதம் போனார்கள்.

துரியோதனனுக்குப் பேரானந்தம். குந்தியையும் அவள் புத்திரர்களையும் வாரணாவதத்தில் தொலைத்து விடச் சகுனியும் கர்ணனும் துரியோதனனும் ஆலோசனை செய்தார்கள். புரோசனன் என்னும் மந்திரியை வரவழைத்து அவனுடன் கலந்து ஆலோசித்து ரகசியமான முடிவுக்கு வந்தார்கள். அவனும் அவ்விதமே செய்வதாக வாக்குக் கொடுத்துப் போனான்.

பாண்டவர்கள் வாரணாவதம் போய்ச் சேரும்போது, புரோசனனும் வேகமான வாகனம் ஏறிச் சென்று அந்த நகரம் போய்ச் சேர்ந்தான். பாண்டவர்களுக்கென்று ஒரு அழகான மாளிகை நிருமாணித்தான். சணல், குங்கிலியம், மெழுகு, நெய், எண்ணெய், கொழுப்பு, அரக்கு இவைகளோடு மண்ணைக்கலந்து தீப்பிடிக்கத் தக்க சரக்குகளையே சேர்த்து மாளிகையைக் கட்டினான். சுவருக்குப் பூசிய பூச்சும் தீப்பிடிக்கத் தக்கதாகவே செய்தான். அங்கங்கே எளிதில் நெருப்புப் பற்றிக்கொள்ளும் படியான பொருள்களைச் சாமர்த்தியமாகப் பல இடங்களில் வைத்து நிரப்பினான். மனதைக்கவரும்படியான ஆசனங்களும் சயனங்களும் ஏற்பாடு செய்தான். மாளிகை முற்றிலும் தயாராகும் வரையில் பாண்டவர்கள் ஊரில் சந்தேகமின்றித் தங்கியிருக்க வசதிகளும் செய்தான். பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் வந்து தங்கி இரவில் தூங்கிக்கொண்டிருக்கும்போது அதற்குத் தீ வைத்து விடத் தீர்மானித்திருந்தான். பல நாட்கள் சுகமாக மாளிகையில் அவர்கள் இருந்த பின் ஊராருக்கு எவ்விதத்திலும் தெரியாதபடி வீட்டுக்கு நெருப்பு வைத்து விட்டு அவர்களைத் தீக்கு இரையாக்கி விட்டால் தற்செயலாக நடந்தது என்று ஜனங்கள் நம்புவார்கள். கௌரவர்கள் பேரில் யாரும் பழிசொல்ல மாட்டார்கள் என்பது துரியோதனனுடைய திட்டம்.

---



★

# காரணம்!

ஏ. ஆர். பி. வார்டன்:—ஏனையா, போன வாரந்தானே, வெளியில் விளக்குத் தெரிந்ததற்காக அபராதம் கட்டினீர்! இன்னும் ஏன் விளக்கிற்கு 'ஷேடு' போடாமல் வைத்திருக்கிறீர்?

வீட்டுக்காரர்:—'ஷேடு' வாங்குவதற்காக வைத்திருந்த பணத்தைத்தான் அபராதம் அழுதுட்டேனே!

★

வீரர்களும் அவர்கள் குடும்பத்தார்களும் அவ்வாறே பாராட்டப்பட்டனர். பாண்டுவோடு பழகின ஜனங்கள் எல்லாரும் யுதிஷ்டிரன் சார்பாகத்தான் இருப்பார்கள். நாம் அவர்களை எதிர்த்து வெல்ல முடியாது. நாம் அதர்மம் செய்தால் நம்மையும் நம்மைச் சேர்ந்தவர்களையும் நகரத்து ஜனங்களே கொல்வார்கள். அல்லது ஊரை விட்டு வெளியேற்றி விடுவார்கள். நாம் உலகத்தின் பழியைச் சம்பாதிப்போம்'' என்றான்.

துரியோதனன், ''பீஷ்மர் எந்தக் கட்சியிலும் சேரமாட்டார். அசுவத்தாமன் எனக்கு வேண்டியவன். துரோணர் தன் புத்திரனைவிட்டு வேறு கட்சிக்குப் போக மாட்டார். அசுவத்தாமனுடைய மாமனாகிய கிருபரும் நம்முடைய பக்கத்தில் தான் இருப்பார். விதுரர் நம்மை வெளிப்படையாக எதிர்க்கமாட்டார். அதற்கு அவருக்குச் சாமர்த்தியம் இல்லை. பாண்டவர்களை இப்போதே வாரணாவதத்திற்கு அனுப்பிவிடும். இதில் ஒன்றும் தவறு நேராது. என் துக்கத்தை நான் பொறுக்க முடியாது; உள்ளத்தைப் பிளக்கிறது. இரவில் தூக்கம் இல்லாமல் செய்கிறது. நான் உயிருடன் இருக்க முடியாது. இவர்களை வாரணாவதத்துக்கு அனுப்பிவிட்டு நாம் நம் கட்சியைப் பலப்படுத்திக் கொள்வோம்'' என்றான்.

* * *

பிறகு சில ராஜநீதி நிபுணர்களையும் தன் கட்சிக்குச் சேர்த்துக் கொண்டு அவர்களையும் தகப்பனிடம் சொல்ல வைத்தான். முக்கியமாகச் சகுனியின் மந்திரியாகிய கணிகன் என்பவன் துரியோதனனுடைய ஆலோசனைக்கு ஆதரவாகத் திருதராஷ்டிரனுக்கு உபதேசம் செய்தான். சொல்லவேண்டியதையெல்லாம் உதாரணங்களுடனும் பிரமாணங்களுடனும் சொல்லிவிட்டு, ''ராஜாவே! செல்வம் உள்ளவன்தான் சிறந்தவன். பாண்டு புத்திரர்களிடமிருந்து உம்மைக் காத்துக் கொள்ளும். அரசனே! பாண்டவர்கள் உம்முடைய சகோதரனுடைய புத்திரர்கள். ஆனாலும் அவர்கள் மிகுந்த பலமுள்ளவர்கள். பின்னிட்டு வருத்தப் படாமலிருக்குமாறு முன் ஜாக்கிரதையாக இருப்பீராக!'' என்றான்.

மறுபடியும், ''நான் சொன்னதைக் கேட்டு என்மேல் கோபம் கொள்ளத் தகாது. அரசன் எப்போதும் தன்னுடைய பராக்கிரமத்தைக் காட்டிக் கொண்டிருக்க வேண்டும். தன் பலத்தைப் பிறர் குறைக்க இடம் கொடுக்கக்கூடாது. ராஜ காரியங்களை ரகசியமாக வைத்துக் கொள்ளவேண்டும். ஒரு காரியத்தை ஆரம்பித்த பிறகு, அதைச் செவ்வையாக நிறைவேற்றாமல் இருக்கக் கூடாது. தைத்த முள்ளையுங்கூடச் சரியாக எடுக்காமற் போனால் நீடித்த புண்ணை உண்டாக்கும். பராக்கிரமமுள்ள விரோதிகளை அழித்து விடவேண்டும். பலஹீனனாக இருந்தாலும் சத்துருவை அலட்சியம் செய்யக்கூடாது. சிறிய நெருப்பும் வனம் முற்றிலும் பரவி எரித்துவிடும். உபாயங்களினால் வசப்பட்டுப்போன சத்துருவைக் கொன்று விடவேண்டும். தயை காட்டத் தகாது. அரசனே! பாண்டு புத்திரர்களிடமிருந்து உம்மைக் காத்துக்கொள்ளும். அவர்கள் மிகுந்த பலமுள்ளவர்கள்'' என்றான்.

துரியோதனன் திருதராஷ்டிரனுக்குச் சொன்னான்: ''நான் ராஜ சேவகர்களுக்குத் திரவியமும் வெகுமதிகளும் கொடுத்துச் சந்தோஷப்படுத்தியிருக்கிறேன். அவர்கள் நமக்குச் சகாயமாகவே இருப்பார்கள். எல்லா மந்



# வியாசர் விருந்து

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## அரக்கு மாளிகை

பீமசேனனுடைய தேக பலத்தையும், அருச்சுனனுடைய சாமர்த்தியத்தையும் கண்டு துரியோதனனுக்குப் பொறாமை வளர்ந்து பரிதபித்தான். துரியோதனனுக்குக் கர்ணனும் சகுனியும் சதியாலோசனைக்காரர்கள். தகப்பனான திருதராஷ்டிரன் அறிவு படைத்தவன். தம்பியின் மக்களிடத்தில் பிரியம் உண்டு. ஆனால் தன் மக்களிடத்தில் பற்று அதிகம்; மனோ பலம் கிடையாது. தெரிந்தே துரியோதனனுக்காகத் தவறான வழியில் செல்வான்.

துரியோதனன் அநேக உபாயம் செய்து பாண்டவர்களைக் கொல்லப் பார்த்தான். விதுரனுடைய ரகசியமான உதவியைக் கொண்டே பாண்டவர்கள் உயிர் தப்பி வந்தார்கள்.

நகரத்து ஜனங்கள் பாண்டவர்களைப் புகழ்ந்தார்கள், நாற் சந்திகளிலும் சபைகளிலும் யுதிஷ்டிரனே ராஜாவாகத் தகுந்தவன் என்று பேசி வந்தார்கள். "திருதராஷ்டிரன், பிறவிக் குருடன்; ஆகையால் அவன் பட்டாபிஷேகம் பெற வில்லை; அவன் எவ்வாறு ராஜ்யத்தைத் தன் சுவாதீனத்தில் இப்போது வைத்துக் கொண்டிருக்கலாம்? பீஷ்மர் சத்திய சந்தர்; அவர் ராஜ்யம் தனக்கு வேண்டாம் என்று சபதம் செய்து விட்டவர். ஆகையால் யுதிஷ்டிரனையே பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டும். அவனே கௌரவர்கள் வம்சத்தையும் நாட்டையும் தருமமாக நடத்துவான்."—இவ்வாறு எங்கே பார்த்தாலும் பேசி வந்தார்கள். துரியோதனனுக்கு இந்தப் பேச்சைச் சகிக்க முடியவில்லை. மனக்கொதிப்பு அடைந்தான்.

தகப்பன் திருதராஷ்டிரனைத் தனியாகப் பார்த்து அவனிடம் சொன்னான்: "பிதாவே! நகரத்து ஜனங்கள் தாறுமாறாகப் பேசுகிறார்கள். உம்மையும் பீஷ்மரையும் கூட அவர்கள் மதிக்கவில்லை. யுதிஷ்டிரனுக்கு உடனே ராஜ்யாபிஷேகம் செய்ய வேண்டும் என்று பேசி வருகிறார்கள். இது நமக்குப் பேராபத்தாக முடியும். கண் தெரியாமையால் நீர் ராஜ்யம் இழந்தீர். உமது தம்பி அரசனானான். அவனுக்குப் பின் யுதிஷ்டிரன் பட்டம் பெற்றால், பிறகு எங்களுக்கு என்றென்றைக்கும் ராஜ்யம் கிடையாது. அவனுக்குப் பின் அவன் மகனுக்கே போகும். நாங்களும் எங்கள் மக்களும் உலகத்தில் அவமதிக்கப்பட வேண்டியதுதான். அன்னத்திற்குக்கூடப் பிறரை அண்ட வேண்டியதாகும். அதைவிட நரகமே மேலாகும்."

இதைக் கேட்ட திருதராஷ்டிரன் சிந்திக்கலானான். "மகனே! நீ சொல்லுவது சரி. ஆயினும் யுதிஷ்டிரன் தருமம் தவறாதவன். எல்லாரிடத்திலும் அன்பு வைத்திருக்கிறான். அவன் தன்னுடைய தகப்பனாரைப் போலவே சிறந்த குணமுள்ளவன். ஜனங்கள் எல்லாரும் அவனை நேசிக்கிறார்கள். அவனை நாம் எவ்வாறு எதிர்க்கக்கூடும்? அவனுக்குச் சகாயம் அதிகமாக இருக்கிறது. தம்பி பாண்டு இருந்த காலத்தில் மந்திரிகள் எல்லாரும் அவனால் நன்றாக ஆதரிக்கப்பட்டார்கள். சேனைத் தலைவர்களும்



காலங் கழிப்பேன்' என்று மனதுக்குள் சபதம் செய்து கொண்டேன். ஆனால், எனக்கு நல்ல வரனைத் தேடிக் கொண்டிருக்கும் அப்பாவின் மனதை மாற்றுவது எப்படி என்று கலங்கினேன். ஆயினும் என் யுக்தியால் அதிலும் வெற்றி பெற்றேன். மாமா! அப்பொழுதுதான் என் உள்ளத்தில் ஒளி வீசிய அன்பு தெய்வீகமானது என்று உணர்ந்தேன். அத் தூய உணர்ச்சிதான் நம் இருவரையும் ஒருவிதமான இடையூறும் இல்லாமல் ஒன்றாய்ச் சேர்த்தது" என்றாள்.

இதைக் கேட்டதும் ஆச்சரியத்துடன், "விமலா! விமலா!! அப்படியானால் உண்மையில் நீ செவிடு இல்லையா?" என்று நான் அலறினேன்.

விமலா கலகலவென்று சிரித்தாள். "மாமா! உங்கள் கையினால் என் கழுத்தில் மாங்கல்யம் கட்டிய அன்றே என் செவிடும் போய்விட்டதே!" என்றாள்.

* * *

"குவா" "குவா" என்ற புதிய சத்தம் சிந்தனை உலகிலிருந்த என்னை இவ்வுலகிற்குக் கொண்டுவந்தது. நான் உற்றுக் கவனித்தேன்.

என் சகோதரியின் காலடி யோசை. "அக்கா!" என்றேன் மெள்ள.

"பாலு! ஆண் குழந்தை!" என்று சொல்லிக் கொண்டே அவள் போய் விட்டாள்.

"ஐயோ! எதுவாயிருந்தால் என்ன? நான் அறிய விரும்புவது அதுவல்லவே?"

பின்னும் சிறிது நேரத்தில் விமலாவின் குரல் கேட்டது.

"அம்மா!" என்றாள் விமலா.

"ஏனம்மா! என்ன வேண்டும்? உடம்பை அலட்டிக் கொள்ளாதே" என்றாள் என் சகோதரி.

"அம்மா! அவரிடம் சொல்லி விட்டாயா?"

"அப்பவே சொல்லி விட்டேனே! எதை? குழந்தை பிறந்ததைத்தானே?"

"இல்லையம்மா, அது இல்லை!......"

என் சகோதரிக்கு விஷயம் புரிவதற்கு இரண்டு நிமிஷமாயிற்று. உடனே அவள் நான் இருக்குமிடம் வந்து, "பாலு! குழந்தையின் கண்கள் பிரகாசத்தோடும், ஒளியோடும் இருக்கு! இப்பொழுதே எல்லாருடைய முகத்தையும் தன் சின்னஞ் சிறு விழிகளால் கொட்டக் கொட்டப் பார்க்கிறது! நீ அதிர்ஷ்டசாலி தான், கவலைப் படாதே!" என்றாள்.

## நற்சாட்சிப் பத்திரம்!




"நீ ராவ் பகதூர் ராமண்ணாவாத்தில் இருந்தேன் என்கிறேளே, ஏதாவது கடிதம் கொண்டு வந்திருக்கிறேளா?"

"என்கிட்டே அப்படிப்பட்ட பொய் பித்தலாட்டங்களெல்லாம் கிடையாது ஸார். வேணும்னு பாருங்கோ, இந்த வெள்ளி டம்ளரிலும் ஸ்பூனிலும் அவர் பெயர் போட்டிருக்கா இல்லையா என்று."

நம்பிக்கை யிழந்த அவர் அவள் விவாக விஷயத்தில் கவனம் செலுத்தினர். ஏராளமான பணத்தை வரதட்சிணையாகக் கொடுப்பதற்கும் தயாரானார். ஆயினும் அவர் எதிர்பார்த்தபடி யாரும் விமலாவை மணக்க முன் வரவில்லை.

கடைசியில் என் அக்காளும், அத்திம்பேரும் விமலாவை என் தலையில் கட்டத் தீர்மானித்தனர். "ஆனால், அவளுக்கு என்னை மணக்க விருப்பம் இராதே?"— இப்படி நினைத்த நான் "அவருக்கு என்ன அப்பா? அழகில்லையா? கண் பார்வை இல்லை என்ற ஒரே குறைதானே? எனக்கு அவரை மணக்கச் சம்மதந்தான்!" என்ற விமலாவின் சொற்கேட்டுத் திகைத்தேன்.

என் விவாகம் யாதொரு ஆடம்பரமுமின்றி நடந்தது. கொதிக்கும் என் உள்ளத்தைச் சற்று ஆற்றும் பொருட்டு மெள்ளத் தட்டுத் தடுமாறிக் கொண்டு தோட்டத்தை யடைந்து, சம்பங்கிக் கொடிப் பந்தலின் கீழ் உட்கார்ந்தேன். கமலாவுடன் பல நாள் விளையாடிய அந்த இடம் எனக்குச் சாந்தி யளித்தது. அந்நாட்களை எண்ணிப் பெருமூச்சு விட்டேன். அப்போது அங்கு வந்த விமலா என் பக்கத்தில் உட்கார்ந்து, "மாமா! துணையின்றி நீங்கள் வரலாமா? எங்காவது மோதிக்கொண்டால், என்ன ஆகும்?" என்றாள்.

நான், "என்ன பதில் சொல்லி அந்தச் செவிடு தெரிந்து கொள்ளும்!" என்று எண்ணிப் பேசாதிருந்தேன்.

விமலா இன்னும் சற்று அருகில் வந்து, "மாமா! இன்னமும் என்மேல் உங்களுக்குக் கோபமா? நான் சிறுமியாக இருந்த பொழுது உங்கள் மனதைப் புண் படுத்தியிருப்பேன். ஆனால், அதை இப்பொழுது நீங்கள் நினைக்கக் கூடாது. நான் உங்களிடம் கொண்டுள்ள அன்பு எத்தகையது என்பது உங்களுக்கே தெரியும். மாமா! உண்மையைச் சொல்லி விடுகிறேன். நான் வைசூரியால் துன்புற்றுப் படுக்கையில் படுத்திருந்த பொழுது, தங்கள் நினைவு அடிக்கடி வரும். உங்களைப் போலவே — மன்னிக்க வேண்டும் — எனக்கும் பார்வை போய்விட்டால் என்ன நேரிடும் என்று பயந்து விடுவேன் — சில சமயங்களில் நான் உங்களைத் தெரிந்தோ தெரியாமலோ அவமதித்திருப்பேன். 'நடந்த என் செய்கைக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும்' என்ற முடிவிற்கு வந்தேன். 'என் ஆயுள் முழுதும் உங்களுக்குப் பணிவிடை செய்வதிலேயே

## குத்துச் சண்டை









# முகஸ்துதி!



நம்ம துரைவாள் இருக்கிறாரே! இவாளுக்கு.......



ஒரே ஒரு பாஷைதான் தெரியும். ஆனால்.



'இல்லை' என்கிற வார்த்தை மட்டும் எல்லா பாஷையிலேயும் தெரியும்!

பாலன்

"நியாயந்தானே? எனக்காக அவள் ஆயுள் முழுதும் கஷ்டப்பட முடியாதுதான்!" — இதை நினைத்துப் பார்க்கும்போது என் உள்ளம் துடித்தது.

"விமலாவின் காலடி ஓசையா, அது?"

அவள் என் மடியில் வீணையை வைத்து, "மாமா! நீ வீணையை மீட்டு; நான் பாடுகிறேன்" என்றாள்.

எனக்குக் கோபம் வந்தது. சமயம் அறியாமல் என் மடியில் வீணையை வைத்த அவளை அடிப்பதற்காகக் கையை ஓங்கினேன். ஆனால் என் அடி வீணையின் மேல்தான் விழுந்தது. என் அடியினின்றும் தப்பிய விமலா, "மாமா! இரு, கமலா புக்ககம் போய்விட்டால் நீ யார் உதவியைத் தேடுவாய்? எடுத்ததற்கெல்லாம் நான் தானே வரணும்?" என்று சொல்லி ஏளனமாய்ச் சிரித்தாள். அவள் சிரிப்பு என்னை உலுக்கி எடுத்தது.

3

கமலாவுக்குக் கலியாணம் ஆயிற்று. என் ஆசியுடன் அவள் புக்ககம் போய்விட்டாள். விமலா சொன்னதும் உண்மையாயிற்று. இப்பொழுதெல்லாம் அவள் உதவியை நானே தேடும்படியாயிற்று. "மாமா! என்னைத்தான் அப்பொழுது முதற்கொண்டே உங்களுக்குப் பிடிக்காதே, இப்பொழுது என் கையைப் பிடித்து வர உங்களுக்கு அருவருப்பாக இல்லையா? இந்தத் தடியைப் பிடித்துக்கொண்டு வாருங்கள்" என்று என் கையில் ஒரு தடியின் நுனியை வைத்து மற்றொரு நுனியை அவள் பிடித்துக்கொண்டு அழைத்துப் போவாள். ஆனாலும் என் உள்ளத்தில் அவளிடம் எனக்கேற்பட்ட வெறுப்பு மட்டில் குறையவேயில்லை. அவளும் ஒருவனுக்கு மனைவியாகி புக்ககம்போகும் நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

காலச் சக்கரம் அதிவேகமாகச் சுழன்றது. திடீரென்று விமலாவுக்கும் வைசூரி போடவே நான் திடுக்கிட்டேன். நான் எவ்வளவுதான் அவளை வெறுத்தாலும் அவள் அந்நோய்க்கு ஆளானபோது, "கடவுளே! அக்குழந்தையை அந்நோயினின்றும் நல்லபடியாகக் காப்பாற்று!" என்று வேண்டினேன். ஆனால், நான் பயந்தபடியே விமலாவை அந்நோய் சும்மா விடவில்லை! அவள் காதுகள் செவிடாயின! என் அத்திம்பேரின் அகம்பாவமும் குறைந்தது. தன் பெண்ணின் செவிடு குணமாவதற்காக ஏராளமான பணத்தைச் செலவு செய்தார். பிரயோசனமில்லை.



பிற பொருளைக் காணும் சக்தியைப் பிடுங்கிக் கொண்ட கடவுள், மற்ற எல்லா சக்தியையும் அதிகமாகவே எனக்குக் கொடுத்திருந்தார். காலடி ஓசையாலேயே வருவது யார் என்பதை அறிந்து கொள்வேன். கூடம், தாழ்வாரம், படுக்கையறை, சமையலறை முதலானவைகளை அனுபவத்தினால் கண்டு கொள்வேன். எனக்குக் கொஞ்சம் சங்கீதம் வரும். அது எங்கள் பரம்பரை சொத்து. இடிந்த என் வாழ்க்கையிலே நான் சிறிதாவது நிம்மதி அடைந்து ஆறுதல் பெற்றது உண்டானால் அது எனக்குக் கிடைத்த சங்கீதத்தினால்தான்.

அநேக தினங்கள் நானும், கமலாவும் வீணையில் பாடுவோம். எங்களுக்குப் பொழுது போவதே தெரியாது. நான் பாட விரும்புவதை எப்படித்தான் அறிவாளோ, வீணையைச் சுருதி கூட்டி என் முன் வைப்பாள். நான் ஆச்சரியத்துடன், "கமலா! நான் நினைப்பதை எப்படித் தெரிந்து கொள்கிறாய்?" என்பேன். அதற்கவள், "உங்களுடன் இத்தனை நாள் பழகியும் இது கூடத் தெரிந்து கொள்ளா விட்டால்?" என்று சொல்லிச் சிரிப்பாள். சில சமயம், "கமலா என்றுமே என்னுடன் இருப்பவள்; அவளைப் பிரிந்து நான் வாழ்வதென்பது இயலாதது; அவளும் என்னைப் பிரிந்து வாழ மாட்டாள்" என்று எண்ணினேன். அது என்ன பேதமை உணர்ச்சி!

பாரிஸ்டர் என்ற பட்டத்தையும், செல்வாக்கையும் பெற்ற என் சகோதரியின் கணவர் தன் பெண் கமலாவுக்கு வரன் தேட ஆரம்பித்தார். பலர் பெண்ணைப் பார்க்கவும் செய்தார்கள். "பாவம், கமலா என்ன செய்வாள்" என்று அப்பொழுதெல்லாம் நான் நினைத்ததுண்டு.

"நீ வாக்குக் கொடுத்துவிட்டால் என்ன? அதற்காக நான் என் பெண்ணைக் குருடனுக்குப் பலியிட மாட்டேன். இனி அந்த எண்ணத்தை விட்டுவிடு" — இது என் அத்திம்பேரின் குரல்தான். நான் திகைத்துப் போனேன்.

"'குருடன்' 'குருடன்' என்று சொல்லி என் மனதை மேலும் புண்படுத்தாதீர்கள். நமது மற்றொரு பெண் விமலாவை உங்கள் இஷ்டப்படி நல்ல இடத்தில் கொடுங்கள்; கமலாவை மட்டும் பாலுவை விட்டுப் பிரிக்காதீர்கள். அதற்கு அவளே சம்மதிக்க மாட்டாளே!" என்றாள் என் சகோதரி.

"அவளே சம்மதிக்க மாட்டாளா? கூப்பிடு, அவளை!"

"அம்மா! அப்பா சொல்வது சரிதானே? அவருக்கு வாழ்க்கைப் படுவதென்பது முடியக் கூடியதா?"

கமலாவேதான் இப்படிச் சொன்னாள்!

அவள் வார்த்தைகள் சம்மட்டியால் என் இதயத்தை அடிப்பது போல் இருந்தது.

# இரு கண்கள்

ஒளஜா

அன்று வீட்டில் ஜன நடமாட்டம் அதிகமாக இருந்தது. 'லேடி டாக்டர்' 'நர்ஸ்' என்ற பேச்சுகள் அதிகம் அடிபட்டன. என் விமலா இன்னும் சிறிது பொழுதில் ஒரு மகவுக்குத் தாயாகப் போகிறாள் என்பது தெரிந்தது. இன்னதென்று சொல்ல முடியாத வேதனையால் ஒரு பெருமூச்சு விட்டேன். அந்தப் பெருமூச்சிலே என் மனம் சில வருஷங்கள் பின்னோக்கி ஓடின.

*　　　*　　　*

நான் பிறவிக் குருடனல்ல. என் பன்னிரண்டாவது வயதில் வைசூரியால் துன்புற்றேன். அக் கொடும் நோயால் என் பார்வை போய்விட்டது. அப்பொழுது பிள்ளைப் பேற்றுக்காக வந்திருந்த என் சகோதரி சாவித்திரிதான் என் மனதிற்குப் பெரிதும் ஆறுதலளித்தாள். தாயற்ற எனக்கு அவளே தாயாகவும் இருந்தாள்.

தவமிருந்து வெகு நாட்களுக்குப் பின் பிறந்த பிள்ளை கண் பார்வையை இழந்து தவிக்கும் கொடுமையைப் பார்க்கச் சகிக்காத என் தந்தை நோய்வாய்ப் பட்டார். அவர் தம் அந்திய தசையில் என் கரத்தைப் பற்றி என் சகோதரியின் கையில் வைத்து, "அம்மா! சாவித்திரி! இனி நீதான் இவனுக்குத் தாயும், தந்தையும். என் குழந்தையை அநாதையாக விட்டு விடாதே! கண் பார்வை யற்றவன் என்று அலட்சியம் செய்யாதே......" என்று சொல்லிக் கொண்டே வந்தவர் துக்கத்தால் மேலே பேசமுடியாமல் சாய்ந்து விட்டார்.

"அப்பா! பானுவைப் பற்றிய கவலையை விடுங்கள். அவன் என் உயிர்; என் குழந்தையை அவனுக்குக் கொடுத்து அவனை என்றும் ஆதரவுள்ளவனாகச் செய்வேன்!" என்றாள் என் சகோதரி.

"இது நிஜந்தானா?"

"அப்பா! இது சத்தியம்! — தங்கள் பாதத்தின் மீது ஆணை!" என்றாள் என் சகோதரி.

என் தந்தை எங்கள் இருவரையும் சேர்த்துத் தழுவி உச்சி முகர்ந்தார். அவர் ஆத்மா சாந்தி யடைந்தது.



## 2

வருஷங்கள் ஓடி மறைந்தன. என் சகோதரியின் முதல் பெண் கமலா கண்ணுக்குக் கண்ணாகவே விளங்கினாள். "மாமா!" என்று என்னை அவள் கூப்பிடுவதே ஓர் அழகா யிருக்கும். எனக்குக் கதைப் புஸ்தகங்கள், தினசரிகள் எல்லாம் வாசித்துக் காட்டுவாள். கையைப் பிடித்துத் தோட்டத்துக்கு அழைத்துச் செல்லுவாள். செடிகளில் என்னென்ன புஷ்பங்கள் என்னென்ன நிறத்தில் மலர்ந்திருக்கின்றன வென்பதை விளக்குவாள். கமலா என் நிழல் போலவே இருந்து நான் கண்ணற்றவன் என்று உணராதவாறு செய்தாள்.

என் சகோதரியின் இரண்டாவது பெண் விமலா கமலாவுக்கு நேர் மாறானவள். அவள், "மாமா!" என்று கூப்பிடுவதி லேயே ஒரு பரிகாசம் தொனிக்கும். கதைப் புஸ்தகத்தை, 'தினசரிப் பத்திரிகை' என்று சொல்லிப் படிப்பாள். நான் வழிதப்பிப் போய்த் தூணில் முட்டிக் கொண்டோ அல்லது இடறிக் கொண்டோ தடுமாறுவதைக் கண்டால் சிறிதும் அனுதாபமின்றிக் கை கொட்டிக் கலகலவென்று நகைப்பாள். "மாமா! நீ குருடன், உனக்கு என்ன தெரியும்?" என்பாள். இதனால் கமலாவை தேவமகளாகப் போற்றிய நான், விமலாவை பேயைப் போல் வெறுத்தேன்.

# பிழைக்கும் வழி

பகீரதன்

பிறரிடம் கூலிக்கு வேலை செய்யத் தங்கராஜனுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே அவன், ஜப்பான் சாமான்களை வாங்கி வண்டியில் வைத்துக் கொண்டு. "எதை எடுத்தாலும் ஒன்றரை அணா!" என்று தெருத் தெருவாகக் கூச்சலிட்டுப் பார்த்தான். நல்ல அம்பர் பத்திகள் என்று சொல்லிக் கொண்டு, மாதிரிக்கு மாத்திரம் கொஞ்சம் அம்பர் பத்திகளை வைத்துக் கொண்டான். பாக்கி எல்லாவற்றையும் ஜம்பக் பத்திகளாகச் செய்து விற்றுப் பார்த்தான். இந்த ஜம்பக் வியாபாரம் நிலைக்காமல் போகவே, "மூளைக்குக் குளிர்ச்சி தருவது; மூந்நூறுவிதப் பச்சிலைகளைச் சேர்த்துக் காய்ச்சியது; தினம் ஒரு காலணா அளவு தலையில் தேய்த்துக் கொண்டால் போதும்" என்று சொல்லி இரண்டணா விளக்கெண்ணெயை இரண்டு ரூபாய்க்கு விற்றும் பார்த்தான்.



கடையில் இதெல்லாம் ஒன்றும் பலிக்காமற் போகவே. 'தங்கராஜன் கம்பெனி' என்று ஒரு வி. பி. பி. கம்பெனியை ஆரம்பித்தான். மூன்று ரூபாய்க்கு மூன்று தங்கக் கடிகாரங்கள் என்று விளம்பரப்படுத்தி விட்டு, 'ஆர்டர்' கொடுத்தவர்களுக்கெல்லாம் ஒரே ஒரு அட்டையில் மூன்று 'தங்கமான' கடிகாரங்களை அனுப்பி வைத்தான். தாது புஷ்டி லேகியம் என்று வெல்லப் பாகை 'பார்சல்' செய்தான். இவைகளில் எல்லாம் அவன் எவ்வளவுக் கெவ்வளவு அதிக லாபத்தை எதிர்பார்த்தானோ, அவ்வளவுக் கவ்வளவு நஷ்டம் வந்தது. அதற்குக்காரணம் பழுதாய்ப் போன பொது ஜனங்கள்தான்! அவர்கள் அவனை சந்தி சிரிக்க வைத்ததோடு, சர்க்கார் கவனிக்கும் படியும் செய்து விட்டார்கள்!

தங்கராஜனுக்கு அவர்களைப் பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்று தோன்றிற்று. பழிக்குப் பழி என்றால் வேறு ஒன்றுமில்லை; அவர்களால் போன பணத்தை அவர்களிடமிருந்தே வசூல் செய்து விடுவது என்று அவன் தீர்மானித்தான்.

பகீரதப் பிரயத்தனத்துடன் தன் அநுபவங்களையெல்லாம் திரட்டி 'வியாபார ரகசியம்' என்று ஒரு புத்தகத்தை வெளியிட்டான். "இந்த ரகசியத்தை நீங்கள் தெரிந்து கொண்டால் மாதம் ஒரு லட்ச ரூபாய் சம்பாதிக்கலாம்" என்று பத்திரிகைகளில் விளம்பரம் செய்தான். அதைப் பார்த்த ஜனங்கள், "அந்தப் பணத்தை அவனே சம்பாதிப்பது தானே!" என்று நினைக்கவில்லை. அவர்கள் அப்படி நினைத்திருந்தால் அந்தப் புத்தகம் ஏன் ஆயிரக் கணக்கில் செலவழிந்திருக்கப் போகிறது? அவன் ஏன் இதற்குள் ஒரு லட்ச ரூபாய்க்குச் சொந்தக்காரனாயிருக்கப் போகிறான்?

இப்பொழுது தெரிகிறதா, உங்களுக்குப் பிழைக்கும் வழி?

# பைத்தியம் இல்லை

சோமாஸ்

அன்று பைத்தியக்கார ஆஸ்பத்திரி மிகவும் சுத்தமாக வைக்கப் பட்டிருந்தது. அங்கு வேலை பார்க்கும் வேலைக்காரர்களெல்லாம் சுத்தமாக உடுத்திக் கொண்டிருந்தனர். ஒவ்வொரு பைத்தியக்கார விடுதியும் வழக்கம்போல் பைத்தியக்காரத் தனமாயிராமல் நன்றாயிருந்தன. அன்று அந்த இடத்தைப் பார்த்தால் எந்தப் பைத்தியக்காரனும் அதைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரி என்று சொல்லமாட்டான்.

அவ்வளவு சுத்தமாக இருந்ததற்குக் காரணம் அன்று அந்த ஆஸ்பத்திரிக்குச் சிறைச்சாலை மந்திரி விஜயம் செய்து பார்வையிடப் போவதுதான்.

கனம் மந்திரி பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு வருகிறார் என்றால் ஆஸ்பத்திரி அதிகாரிகள் சும்மா இருந்து விடுவார்களா? அப்படி அசட்டையாயிருக்க அவர்களுக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?

ஆஸ்பத்திரி அதிகாரி வேலைக்காரர்களையெல்லாம் அதட்டி 'அதைச் செய், இதைச் செய்' என்று உத்தரவுக்குமேல் உத்தரவு இட்டு அவர்களைப் பைத்தியமாக அடித்துக் கொண்டிருந்தார்.

ஏன் என்று கேட்பாரற்றுக் கிடந்த ஆஸ்பத்திரியின் மேஜைகளும் பெஞ்சுகளும் புதுப்பிக்கப்பட்டன. ஜன்னல்களும் கதவுகளும் முன்மாதிரியே இல்லை. கட்டடம் முழுவதும் சுண்ணாம்பு அடித்திருந்தது.

குறித்த காலத்தில் கனம் மந்திரியின் கார் ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தது. அங்கே சிகிச்சை பெறும் பைத்தியக்காரர்கள் வரிசையாக நின்று கொண்டிருந்தனர். மந்திரி காரை விட்டுக் கீழே இறங்கினார். உடனே ஆஸ்பத்திரி அதிகாரி பைத்தியக்காரர்களைப் பார்த்து "இவர் நமது காருண்ய அரசாங்கத்தின் கனம் பொருந்திய மந்திரி. இந்த ஆஸ்பத்திரியைப் பார்வையிட வந்திருக்கிறார். பைத்தியக்காரத்தனமாய் இருக்காதீர்கள்! உங்கள் மரியாதையை இவருக்குச் செலுத்துங்கள்!" என்றார். அவ்வளவு பைத்தியக்காரர்களும் 'ஸலாம்' வைத்தனர். மந்திரியும் பதிலுக்கு 'ஸலாம்' வைத்தார்.

அப்பொழுது அந்தப் பைத்தியக்காரக் கும்பலில் ஒருவனைப் பார்த்ததும மந்திரிக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. ஏனென்றால் அத்தனை பேருக்குள் அவன் ஒருவன் மட்டும் மந்திரிக்கு ஸலாம் வைக்கவில்லை.



"என்ன இவன் மரியாதை தெரியாத பைத்தியக்காரனாயிருக்கிறானே? இவன் மட்டும் ஏன் ஸலாம் வைக்கவில்லை?" என்று அருகிலிருந்த அதிகாரியைக் கேட்டார்.

"அவனுக்குப் பைத்தியம் தெளிந்து விட்டது. நாளையதினம் அவனை அவன் வீட்டுக்கு அனுப்பப் போகிறோம்!" என்ற அடக்கமான பதில் பளிச்சென்று ஆஸ்பத்திரி அதிகாரியிடமிருந்து வந்தது.

இந்திய தேயிலையின் அபிவிர்த்தி

# பத்து லக்ஷம் ஏக்கரில் பத்து லக்ஷம் பேர்



பத்து லக்ஷம் ஏக்கரில் பத்து லக்ஷம் பேர்! பெரியதொரு இந்தத் தொழிலாளர் சேனை இந்தியாவில் ஆயிரம் தேயிலைத் தோட்டங்களில் உழைக்கின்றன. அங்கே ஜாதி மத பேதம் இல்லாமல் மனதில் திருப்தியும் மகிழ்ச்சியும் கொண்டு அவர்கள் உழைத்து வருகிறார்கள். இந்தியத் தேயிலைப் பானத்தை அருந்தி அதன் மூலம் இந்தியத் தொழிலாளியின் உழைப்பின் பயனைப் பெறுங்கள். அதுவே உலகத்தின் உன்னத பானம்.



இந்த விளம்பரத்தைக் கத்தரித்து எடுத்து உங்களுடைய பெயர் விலாசம் தொழில் முதலிய விபரங்களுடன் அனுப்புங்கள். விலாசம்: இந்தியத் தேயிலைக் கமிஷனர், இந்தியத் தேயிலை மார்கெட் விஸ்தரிப்பு போர்டு, தபால்பெட்டி நெ. 2172, கல்கத்தா. மேற்கண்ட விலாசத்துக்கு அனுப்பினால், "டீ மார்ச் ஆப் இந்தியா" என்ற புத்தகம் உங்களுக்கு இலவசமாக அனுப்பப்படும். அது தேயிலைத் தொழிலைப்பற்றியும் அது எவ்வளவு உன்னதமான பானம் என்பதைப்பற்றியும் வர்ணிக்கும் புத்தகம்.

# இந்தியன் டீ

உலகத்தின் உன்னத பானம்



இந்தியன் டீ மார்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டினால் வெளியிடப்பட்டது

IK-190



# மணியின் முயல்குட்டி

ராஜு

**ம**ணியின் பிறந்த நாளுக்கு அவன் மாமா அவனுக்கு ஒரு முயல் குட்டியைப் பரிசாகக் கொடுத்துச் சென்றார். முயல் குட்டியைக் கண்ட மணிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அதன் கழுத்தில் ஒரு கறுப்புக் கயிற்றைக் கட்டி அதில் இரண்டு மூன்று சலங்கை மணிகளைத் தொங்கவிட்டான். மணி வெளியில் போகும் பொழுது முயல்குட்டி துள்ளி விளையாடிக் கொண்டே அவனுடன் வரும். அப்பொழுது "அதன் கழுத்திலுள்ள சலங்கைகள்" ஓசைப்படும். அதைக் கேட்டு மணி சந்தோஷமடைவான்.

ஒருநாள் சாயங்காலம் மணி பள்ளிக்கூடம் விட்டு வீடு திரும்பினான். வழக்கம்போல முயல் குட்டி கட்டியிருக்கும் இடத்திற்கு ஓடினான். ஆனால் வழக்கத்துக்கு மாறாக அங்கு முயல் குட்டியைக் காணவில்லை. மணிக்குத் தூக்கி வாரிப் போட்டது. வீடு முழுவதும் தேடினான். முயல் குட்டியைக் கண்டுபிடிக்க முடியவில்லை. முயல் குட்டியைத் தேடிக் கொண்டே வீதிகளின் வழியாகச் சென்றான்.

**வ**ழியில், ஒரு மரத்தடியில் வயோதிகர் ஒருவர் உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றிலும் பல மூங்கில் குச்சிகள் கிடந்தன. மணி அவரிடம் நெருங்கி, "ஐயா, என் முயல் ஒன்றைக் காணவில்லை. நீங்கள் அதைப் பார்த்தீர்களா?" என்று ஆவலுடன் வினவினான். ஆனால் அவ் வயோதிகர் உடனே பதில் சொல்லாமல் சற்றுத் தாமதித்தார்.



பிறகு சற்று மெல்லிய குரலில், "குழந்தாய்! நான் தினந்தோறும் இங்கு பல முயல்களைப் பார்க்கிறேன். உன் முயல் எது என்று எனக்கு எப்படித் தெரியும்? ஆயினும் உன் முயல் குட்டி



யைக் கண்டு பிடிக்க நான் உதவி செய்கிறேன்" என்று சொல்லி "இதோ, இந்தச் சிறிய மூங்கில் குச்சியை வைத்துக் கொள். இது மந்திர சக்தியுள்ள குச்சி; இக் குச்சியினால் ஒரு பொருளை வேறொரு பொருளாக மாற்றலாம். அந்தப் பொருளின் உருவத்தை மாற்றலாமே தவிர, உயரத்தையோ அகலத்தையோ மாற்ற முடியாது. மேலும், இக்குச்சி உனக்கு ஒரு முறைதான் உபயோகப்படும். நீ கெட்டிக்காரனாக இருந்தால் இக் குச்சியை வைத்துக் கொண்டு உன் முயல் குட்டியை அடையலாம்" என்றார்.

சற்று தூரத்தில் வெளிச்சம் தெரிந்தது. மணி அந்த திக்கை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். அப்பொழுது அந்த இடத்தில் புலியும், சிங்கமும் உறுமும் சத்தம் கேட்டது. அதற்குப் பயப்படாமல் மணி தன் முயலைத் தேடிக் கொண்டு போனான். அது ஒரு சர்க்கஸ் கூடாரம். அங்கே பல கூண்டுகளில் துஷ்ட மிருகங்கள் அடைபட்டிருந்தன. மணி எங்கேயாவது தன் முயல் குட்டி இருக்கிறதோ என்று தேடினான். அப்பொழுது ஒரு சிறிய கூண்டிலிருந்து சலங்கைகளின் சத்தம் கேட்டது. மணி ஓடோடியும் சென்று பார்த்தான். இரும்புக் கம்பிகளினால் செய்யப்பட்ட ஒரு சிறிய கூண்டில் அவன் முயல் குட்டி அடைபட்டு இருந்தது.

அந்தக் கூண்டிலிருந்து முயல் குட்டியை சர்க்கஸ்காரர்களுக்குத் தெரியாமல் எப்படித் தப்புவிப்பது என்று மணி விழித்தான். அப்பொழுது வயோதிகர் கொடுத்த மந்திரக் குச்சியின் ஞாபகம் அவனுக்கு வந்தது. இக் குச்சியின் உதவியால் அதை ஒரு எறும்பாகவோ அல்லது ஈயாகவோ மாற்றினால் அது கம்பி வழியாக வெளிவந்து விடும் என்று யோசனை செய்தான். ஆனால், அது சாத்தியம் இல்லை என்று தெரிந்தது. உருவத்தை மாற்ற முடியும் என்று கிழவர் சொல்லியிருக்கிறாரே தவிர, அகலம் பருமனை மாற்ற முடியாதல்லவா? அவன் முயலை ஈயாக மாற்றினாலும், ஈ முயல் அளவு பருமன் இருந்து விட்டால் அதை மாற்றி என்ன பிரயோஜனம்?

கூண்டைப் பெரிதாகச் செய்து முயலை விடுவிப்பதோ முடியாத காரியம். என்ன செய்வதென்று தெரியாமல் மணி திண்டாடினான்.

உடனே அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. மணி சட்டென்று மந்திரக் குச்சியை எடுத்தான். வயோதிகரை நினைத்துக்கொண்டு "கூண்டில் இருக்கும் கம்பிகள் கற்கண்டுக் கம்பிகளாக மாறட்டும்" என்று சொன்னான். உடனே இரும்புக் கம்பிகள் கற்கண்டுக் கம்பிகளாக மாறின. முயல் குட்டி தன் நாக்கினால் ஒரு கம்பியை நக்கிற்று. ஐந்தே நிமிஷத்தில் இரண்டு மூன்று கம்பிகளை ருசி பார்க்கவே, அவை இருந்த இடம் தெரியாமல் போயின. முயல் குட்டி குதித்துக் கொண்டே கூண்டை விட்டு மணியிடம் ஓடிவந்தது. அப்பொழுது வயோதிகர் அங்கு வந்தார். "மணி! உன் புத்திசாலித்தனத்துக்கு மெச்சினேன்" என்று அவர் அவனை மெச்சினார்.



# காலக்ஷேபம்

### தெரியக்கூடாது!

**குமாஸ்தா:**— ஸார்! எனக்குக் கல்யாணமாகி இருக்கிறது. சம்பளம் கொஞ்சம் உயர்த்த வேண்டும்.

**முதலாளி:**—ஏன், குடும்பச் செலவுக்கு வரும்படி போதவில்லையோ?

**குமாஸ்தா:**—அப்படி இல்லை, ஸார்! என் மனைவிக்கு என் சம்பளம் என்னவென்று தெரியும். கொஞ்சம் உயர்த்தினால், அந்தத் தொகையையாவது அவளுக்குத் தெரியாமல் என் சொந்தச் செலவுக்கு வைத்துக் கொள்வேன்.

—**சி. ஆர். விஜயராகவன்.**

●

### சரித்திர ஆராய்ச்சி

பாபரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்த உபாத்தியாயர் ராமுவைப் பார்த்து, "ராமு! பாபர் தமது தோள்களில் இருவரைத் தூக்கிக்கொண்டு ஒரு மதிற்சுவரின்மீது ஓடினார் என்பதிலிருந்து என்ன தெரிகிறது?" என்று கேட்டார்.

**ராமு:**—மதிற் சுவர் ரொம்ப அகலமாக இருந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது, ஸார்! —**மங்கள பிரஸாத்.**

●

### கவனிக்கவில்லை!

**புருஷன்:**—ஏன்டீ! எங்கள் மானேஜரின் இரண்டாவது மனைவி இன்று கோவிலுக்கு வந்திருந்தாளே, பார்த்தாயா?

**மனைவி:**—அவளை யார் பார்த்தா? ஆகாச வர்ணப் புடவை கட்டிண்டு, ரோல்டு கோல்டு 'பிரேம்' போட்ட மூக்குக் கண்ணாடி, வலது கையில் மதங்க வளையல், இடது மணிக்கட்டிற்குச் சரியாக சிறிய ரிஸ்ட் வாட்ச்— இத்தனையோடே இப்படியும் அப்படியும் ஆடிக் கொண்டு போயிண்டிருந்தாளே! அவளை யார் கவனிச்சா?

—**டி. எஸ். குப்புஸ்வாமி.**

### பார்க்க முடியுமா?

**பூகோள வாத்தியார்:**—பௌர்ணமி, அமாவாசை இந்த இரண்டு இரவுகளிலும் பீச்சுக்குப் போனவர்கள் இருக்கிறீர்களா?

**ரங்கன்:**—நான் போயிருக்கேன், ஸார்!

**பூ. வா:**—பௌர்ணமியன்று அலைகள் உயரமாகவும் பலமாகவும் இருப்பதையும், அமாவாசையன்று அப்படியில்லாததையும் நீ பார்த்திருக்கிறாயா?

**ரங்கன்:**— பார்த்திருக்கேன், ஸார்! பௌர்ணமியன்று சந்திரனின் வெளிச்சத்தில் அலைகள் நன்றாகத் தெரிகின்றன; அமாவாசையன்று இருட்டாயிருப்பதனால் தெரிவதில்லை.

**எம். கோபாலகிருஷ்ணன்.**

●

### இடமில்லை!

மணியை மூன்றாம் பாரத்தில் சேர்ப்பதற்காகப் பள்ளிக்கூடம் சென்ற அவனுடைய தகப்பனாரிடம், தலைமை உபாத்தியாயர் "இடமில்லை" என்று சொல்லி விட்டார். திரும்பி வந்த மணியைப் பார்த்து அவனுடைய பாட்டி, "ஏண்டா, மணி! நீ பள்ளிக்கூடத்தில் சேரவில்லையாடா?" என்று கேட்டாள்.



**மணி:**—இல்லை, பாட்டி! உபாத்தியாயர் வகுப்பில் இடமில்லை என்று சொல்லி விட்டார்.

**பாட்டி:**—போடா, முட்டாள்! பெஞ்சியில் இடமில்லையென்றால் கீழே உட்கார்ந்து கொள்ளுகிறேன் என்று சொல்லப்படாதோ?

—**எஸ். வெங்கடராமன்.**

"இல்லை; நீ என்னுடன் வர வேண்டாம்."

"பிரபுவின் சித்தம்."

"மறு கட்டளை பிறக்கும் வரையில் இந்த நாக நந்தியை நீ தொடர வேண்டும்......"

"தொண்டை நாட்டை விட்டுப் போனால்......?"

"அப்போதுந்தான்."

"சோழ நாடு, பாண்டிய நாடு சென்றால்?"

"பின்னோடு போகவேண்டும். யாரிடமாவது பிக்ஷு ஒருவனை ஓலை ஏதாவது அனுப்பினானால்......"

"என்ன செய்ய வேண்டுமென்று தெரியும், சுவாமி! ஆனால், செங்காட்டாங்குடிப் பிள்ளையிடம் அனுப்பும் ஓலை......?"

"அது ஆயனர் சம்பந்தப்பட்ட விஷயம்; நானே பார்த்துக் கொள்கிறேன். எந்த முகாந்திரத்தினாலும் நாகநந்தியைத் தவற விடக்கூடாது. ஏதாவது விசேஷமிருந்தால் குமார சக்கரவர்த்தி மூலம் எனக்குச் செய்தியனுப்ப வேண்டும்."

"அப்படியே, பிரபு!"

சக்கரவர்த்தியும் நரசிம்மரும் அங்கிருந்து அரண்மனைக்குத் திரும்பிய போது "இராஜ விஹாரத்தை உடனே மூடி, கோட்டை மதிளில் உள்ள துவாரத்தை அடைத்துவிட வேண்டாமா?" என்று மாமல்லர் கேட்டார்.

"கூடாது, குழந்தாய், கூடாது. அதற்குக் காலம் வரும்போது செய்யலாம். இப்போது பகைவர்களின் சூழ்ச்சிகளை அறிவதற்கு அந்த இரகசியக் கதவு நமக்கு உதவியாயிருக்கும்" என்று சக்கரவர்த்தி மறுமொழி கூறினார்.

ஆயனர் வீட்டில் புத்தர் சிலைக்குப் பின்னால் புத்த பிக்ஷுவும் பரஞ்சோதியும் இருந்ததை மகேந்திரர் ஊகித்தறிந்தது, மதிள்சுவரில் இருந்த இரகசியக் கதவைக் கண்டுபிடித்தது முதலிய காரியங்களினால் சக்கரவர்த்தியிடம் குமாரருக்கு இருந்த மதிப்பு பன்மடங்கு அதிகமாகி யிருந்தது. ஆகவே, காஞ்சிக் கோட்டைக்கு வெளியே போகக்கூடாது என்ற தந்தையின் கட்டளையை மீறும் எண்ணமே அவருக்கு உதிக்கவில்லை.

ஆனால், கோட்டைக்குள்ளே பொழுது போவதும் அவருக்கு மிகவும் சிரமமாக இருந்தது. இராஜ்யத்தில் பெரிய காரியங்கள் நடந்து கொண்டிருக்கும் போது, மகத்தான யுத்தம் நெருங்கி வந்து கொண்டிருந்தபோது, கோட்டைக்குள்ளே ஒரு காரியமுமின்றி அடைந்து கிடப்பது அவருக்குப் பரம சங்கடத்தை அளித்தது.

கழுக்குன்றத்தில் பல்லவ சைனியங்கள் திரண்டு கொண்டிருக்கின்றனவே, அதைப் போய் அடிக்கடி பார்க்கவாவது தந்தையிடம் அநுமதி பெறாமல்போனோமே என்று மாமல்லர் ஏக்கமடைந்தார். கழுக்குன்றம் வரையில் போகும்போது, அப்பால் மாமல்லபுரம் போகவும் அநுமதி பெற்றிருந்தால்? ......

ஆம்; எத்தனையோ எண்ணங்களுக்கிடையில் சிவகாமியைப் பற்றிய நினைவும் மாமல்லருக்கு அடிக்கடி தோன்றிக் கொண்டுதானிருந்தது. அவள் தீட்டிய தாமரைக்கும் மானுக்கும் மத்தியில் தான் எழுதியிருந்த வேலைப் பார்த்தாளோ, இல்லையோ? பார்த்திருந்தால், அதன்பொருளைத் தெரிந்து கொண்டிருப்பாளா? தெரிந்து கொண்டிருந்தாலும், அதனால் திருப்தியடைந்திருப்பாளா?

தந்தையிடம் நாம் வாக்குக் கொடுத்திருக்கும் விஷயம் அவளுக்குத் தெரியாதல்லவா? ஆதலின் தன்னைப் பார்க்க வரவில்லையென்று அவளுக்குக் கோபமாய்த்தான் இருக்கும். அவள் தான் இங்கு ஏன்வரக்கூடாது? ......ஆனால், அவள் எப்படி வருவாள்? ஆயனருக்குந்தான் தந்தை அவ்வளவு கடுமையான கட்டளை யிட்டிருக்கிறாரே? வேலையை விட்டு வர முடியாதல்லவா?

இவ்விதம் குமார சக்கரவர்த்தியின் உள்ளம் பலவித சிந்தனைகளில் ஆழ்ந்திருந்தது. செய்வதற்கு வேலையில்லாதபடியால் அவருடைய மனவேதனை அதிகமாயிற்று.

இந்த நிலைமையில் திருநாவுக்கரசு ஸ்வாமிகள் காஞ்சிக்குத் திரும்பி வந்து விட்டார் என்று அறிந்ததும் மாமல்லர் அவரைத் தரிசித்து விட்டு வரலாமென்று எண்ணினார். சுவாமிகளிடம் தெரிவிக்கும்படி சக்கரவர்த்தி கூறியிருந்த செய்தி ஒன்றும் இருந்தது. எனவே, ஒரு நாள்

மாலை ஏகாம்பரேசுவரர் திருக் கோயிலுக்கருகிலிருந்த நாவுக்கரசர் மடாலயத்துக்கு அவர் சென்றார்.

நாவுக்கரசப்பெருமான் குமார சக்கரவர்த்தியை அன்புடன் வரவேற்றுத் தாம் சென்றிருந்த ஸ்தலங்களின் மகிமையைப் பற்றிக் கூறினார். சக்கரவர்த்தி வட நாடு சென்றிருப்பது பற்றியும், பல்லவ ராஜ்யத்தில் யுத்தம் வந்திருப்பது பற்றியும் விவரமாகக் கேட்டுத்தெரிந்துகொண்டார்.

பின்னர், சுவாமிகள், "குழந்தாய்! சக்கரவர்த்தியிடம் ஒரு விஷயம் தெரிவித்துக் கொள்ள எண்ணியிருந்தேன். அவர் இல்லாத படியால் உன்னிடம் சொல்கிறேன். இந்த இடத்திலிருந்து நமது மடத்தை அப்பாற் படுத்தித் திருமேற்றளியில் அமைத்துக் கொள்ள விரும்புகிறேன். இந்த ஏகாம்பரர் கோயில் நகருக்கு மத்தியிலே இருப்பதால் இங்கே அமைதி கிட்டுவதில்லை. மேலும் இங்கே என்னுடைய சீடர்களுக்கும், பக்கத்திலுள்ள கடிகை - ஸ்தானத்தில் வடமொழி பயிலும் மாணாக்கர்களுக்கும் ஓயாமல் வாக்கு வாதமும் போட்டியும் நடந்துகொண்டிருக்கின்றன. ஆரியம், தமிழ் இரண்டையும் அளித்த எம்பெருமான் ஒருவரே என்று அவர்களுக்கு எவ்வளவோ சொல்லியும் பயனில்லை. இளங்காளைப் பருவமல்லவா? அப்படித்தான் இருக்கும். வட நாட்டிலிருந்து வந்து ஏகாம்பர நாதர் கோயிலில் கூட்டம் போட்டிருக்கும் காபாலிகர்களின் தொல்லையும் பொறுக்க முடியவில்லை. அதனால் திருமேற்றளி இறைவன் சந்நிதிக்குப் போய் விடலாமென்று பார்க்கிறேன். இவ்விடத்தைக் காட்டிலும் அங்கே அமைதியாயிருக்கிறது" என்றார்.

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த குமார சக்கரவர்த்தி கூறுவார்:—

"சுவாமி! முன்னம் ஏகாம்பரர் கோவிலிலிருந்து இந்தக் காபாலிகர்களை யெல்லாம் துரத்திவிட வேண்டுமென்று சொன்னேன்; தாங்கள்தான் வேண்டாம் என்றீர்கள். தங்கள் விருப்பத்தின்படி திருமேற்றளியில் மடத்தை அமைத்துக் கொள்வதில் ஆட்சேபமில்லை. ஆனால், சக்கரவர்த்தி தங்களிடம் தெரிவிக்கச் சொல்லிக் கட்டளையிட்ட விஷயத்தைத் தெரிவிக்கிறேன். பிறகு, தங்கள் உசிதம் போல் செய்யலாம். யுத்தம் தொண்டை நாட்டுக்கே வந்துவிடலாமென்றும், இந்தக் காஞ்சி நகரம் முற்றுகைக்கு உள்ளாகலாமென்றும் தந்தை கருதுகிறார். யுத்தம் ஒருவிதமாக முடியும் வரையில் தாங்கள் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் தீர்த்த யாத்திரை செய்வது நலம் என்று அவருடைய அபிப்பிராயத்தைத் தங்களுக்குத் தெரியப்படுத்தச் சொன்னார். அதுவரையில் நமது மடத்தை மூடி வைத்து விடுவது உசிதம் என்றும் சக்கரவர்த்தி கருதுகிறார். இதைப் பற்றி யோசித்துத் தாங்கள் சித்தம்போல் முடிவு செய்யலாம்."

நாவுக்கரசர் சிறிது நேரம் சிந்தனை செய்து விட்டு, "சக்கரவர்த்தியின் யோசனை எனக்கும் சம்மதமாகத்தான் இருக்கிறது. ஆனால், முன்னமே தெரியாமல் போயிற்றே? திருமேற்றளியில் மடத் திருப்பணி ஆரம்பிப்பதற்காக ஆயனரை வரும்படி நான் சொல்லியனுப்பியிருக்கிறேன்... ...ஒருவிதத்தில் அதுவும் நல்லதுதான். நீண்ட யாத்திரை கிளம்புவதற்கு முன்னால் ஆயனரைப் பார்த்துவிட்டுப் போகலாம்" என்றார்.

ஆயனர் வருகிறார் என்று கேட்டதும் மாமல்லரின் உள்ளத்தில் ஒரு குதூகலம் உண்டாயிற்று.

"ஆயனர் எப்போது வருவார், சுவாமி?" என்று ஆர்வத்துடன் கேட்டார்.

"ஒரு வேளை இன்று மாலையே வரக்கூடும்" என்றார் நாவுக்கரசர்.

அவர் வரும் வரையில் தாமும் அங்கே இருப்பது என்று மாமல்லர் தீர்மானித்துக் கொண்டு, "சுவாமி! செங்காட்டாங் குடியிலிருந்து தங்களுக்கு ஓலை கொண்டுவந்த வாலிபனை ஆயனர் நாகார்ஜுன மலைக்கு அனுப்பியிருக்கிறாரே, தெரியுமா?" என்று கேட்டார்.

"அது என்ன? எனக்கு ஒன்றும் தெரியாதே?" என்று சுவாமிகள் சொல்ல, நரசிம்மர் பரஞ்சோதியைப் பற்றி அவர் அறிந்திருந்தவற்றை விவரமாகக் கூறலானார்.

இவ்விதம் பேசிக் கொண்டிருக்கும் போது வாசற் புறமிருந்து உள்ளே ஒரு சீடர் விரைவாக வந்து "ஆயனர் வருகிறார்!" என்று அறிவிக்கவே, எல்லாருடைய கண்களும் வாசற்புறம் நோக்கின.

அத்தியாயம் 34

# மடாலயம்

**ப**ரஞ்சோதிக்கு முன் அத்தியாயங்களில் கூறிய ஆச்சரிய அநுபவங்கள் நேர்ந்து கொண்டிருந்த அதே தினம் மாலை நேரத்தில், காஞ்சிமா நகரில் பெரிய இடத்தில் அவனைப் பற்றிப் பேச்சு நடந்துகொண்டிருந்தது. 'பெரிய இடம்' என்றால், அற்ப சொற்பமான பெரிய இடம் அல்ல. பல்லவ குலந் தழைக்க வந்த குமார 'சக்கரவர்த்தி மாமல்ல நரசிம்மரும், சைவந் தழைக்க வந்த திருநாவுக்கரசு ஸ்வாமிகளும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

* * *

**மா**மல்லபுரத்திலிருந்து திரும்பி வந்த அன்றிரவு மகேந்திரர் மாமல்லரையும் அழைத்துக் கொண்டு மாறு வேடத்துடன் கோட்டைக்கு வெளியே சென்றார். குதிரைகளை ஒரு மறைவான இடத்தில் நிறுத்தி விட்டு மதிளைச் சூழ்ந்திருந்த அகழியின் கரையோரமாக அவர்கள் போனார்கள்.

திடீரென்று அகழியில் படகு செலுத்தும் சத்தம் கேட்டு நரசிம்மர் அளவிறந்த வியப்புக்கு உள்ளானார். அவரைச் சத்தம் செய்யவேண்டாமென்று சமிக்ஞை காட்டினார் மகேந்திரர். இருவரும் அருகில் இருந்த அடர்த்தியான புதரில் மறைந்து கொண்டார்கள்.

ஆம்; படகு அகழியில் சென்று கொண்டிருந்தது. அதை ஓட்டியவன் சத்தம் அதிகமாகக் கேளாதபடி சர்வ ஜாக்கிரதையாகத் துடுப்புகளைப் போட்டுக்கொண்டிருந்தான். படகு அக் கரையில் அதாவது மதிள் கரையில் போய் நின்றது. அதிலிருந்து இருவர் இறங்கினார்கள். அந்தச் சிறு படகை அவ்விருவருமாக இழுத்துக் கரையேற்றினார்கள். அந்தண்டைப் பக்கத்தில் அடர்த்தியாக இருந்த ஒரு புதரின் மறைவில் அதைத் தள்ளி விட்டு மதிளை நோக்கிச் சென்றார்கள்.

மதிளண்டையில் அவர்கள் சேர்ந்து நின்றது ஒரு கணம். அடுத்த கணத்தில் அவர்கள் மாயமாய் மறைந்தார்கள். ஒரு பிரம்மாண்டமான மலைப்பாம்பு (?) சிலந்திப் பூச்சியானது தன் அருகில் வந்த இரண்டு கொசுக்களை ஒரு கொடியில் நாக்கை நீட்டி விழுங்கி விட்டுப் பழையபடி சலனமற்றிருப்பது போல், அந்தக் காஞ்சிக் கோட்டையானது தன்னை நெருங்கிய இருவரையும் கண்ணிமைக்கும் நேரத்தில் விழுங்கி விட்டு மறுபடியும் அசைவற்றிருப்பது போலத் தோன்றியது.

மங்கலான நட்சத்திர வெளிச்சத்தில் அவ்விதம் படகிலிருந்து இறங்கி மதிளை நெருங்கி மாயமாய் மறைந்த இருவரும் புத்த சந்நியாசிகள் என்பதும், அவர்களில் ஒருவர் உயரமான ஆஜானபாகு என்பதும், இன்னொருவர் வாலிப பிக்ஷு என்பதும் ஒருவாறு தெரிய வந்தன.

இதையெல்லாம் பார்த்ததினால் குமார சக்கரவர்த்திக்கு உண்டான பிரமிப்பு நீங்குவதற்கு முன்னால், அங்கு இன்னொரு வியப்பான சம்பவம் ஏற்பட்டது.

பக்கத்திலிருந்த வேறொரு புதரிலிருந்து ஒரு ஆள் திடீரென்று கிளம்பி வந்தான். அவன் சக்கரவர்த்திக்குத் தண்டம் சமர்ப்பித்து விட்டுப் பணிவுடன் நின்றான்.

அவனைப் பார்த்துச் சிறிதும் வியப்புறாமல் மகேந்திரர், "சத்ருக்னா! இந்தச் சுவரிலுள்ள கதவு எங்கே திறக்கிறதென்று ஊகிக்கிறாய்?" என்று கேட்டார்.

"இராஜ விஹாரத்தில் புத்தர் சிலைக்குப் பின்னால் சுவாமி!" என்றான் சத்ருக்னன்.

"சுவரில் கதவு வைத்தவன் மிகவும் கெட்டிக்காரனாயிருக்க வேண்டும்; இல்லையா?"

"கதவு வைத்தவனைக் காட்டிலும் மேலே வர்ணம் பூசியவன் மகா கெட்டிக்காரன், பிரபு! பகலில் இவ்விடம் வந்து பார்த்தேன். கதவு இருப்பதாகவே தெரியவில்லை."

"நாகநந்தி எப்போது மறுபடி வெளியேவருவாரென்று நினைக்கிறாய்?"

"இன்று ராத்திரியே திரும்பலாம்; அதனால் தான் காத்திருக்கிறேன்."

"ரொம்ப நல்லது; சத்ருக்னா! நாளைக்கு நான் வடக்கே போகிறேன்."

"ஆக்ஞை! பிரபு! நானும் ஆயத்தமாயிருக்கிறேன்."

"இன்னாரென்று தெரியாமலா அவருக்கு அவ்வளவு மரியாதை செய்தீர்கள்?"

"காரணமில்லாமல் மரியாதை செய்யவில்லை. அவரிடம் சிங்க முத்திரை போட்ட இலச்சினை இருந்ததே; உனக்குத் தெரியாதா? நீயும் தம்முடன் வருவதாக அவர் சொன்னாரே, அது பொய்யா?"

"நேற்று மாலை சூரியன் அஸ்தமிக்கும் சமயத்திலிருந்து அவருடன்தான் வந்தேன். சிங்க இலச்சினை யென்றால் அதில் என்ன விசேஷம்?"

"வெகு முக்கியமான இராஜாங்க காரியமாகப் போகிறவர்களிடந்தான் சிங்க இலச்சினை இருக்கும். இது தெரியாதா உனக்கு?"

காவலர்களில் ஒருவன் "போகிறவர் யாரா யிருக்கும்?" என்று மற்றவர்களைப் பார்த்துக் கேட்டான்.

"அமைச்சர்களில் ஒருவரா யிருக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது" என்றான் ஒருவன்.

"சேனாபதி கலிப்பகையை நீக்கிவிட்டு வேறொரு சேனாபதியைச் சக்கரவர்த்தி அனுப்பப்போவதாகக் கேள்வி. புதிய சேனாபதியா யிருந்தாலும் இருக்கலாம்" என்றான் ஒருவன்.

"அதற்கு என்ன காரணம்?" என்று கேட்டான் விடுதித் தலைவன்.

"வேறு காரணம் வேண்டுமா என்ன? வாதாபி படைகள் வைஜயந்தியைக் கைப்பற்றிக் கொண்டு வடபெண்ணையை நெருங்கி விட்டதாகக் கேள்வி. அப்படியிருக்க, நமது சேனாபதி வடக்கு மண்டலத்துச் சைனியத்தை இருந்த இடத்திலேயே வைத்துக் கொண்டிருப்பது போதாதா?"

"சக்கரவர்த்தியிடம் யோசனை கேட்கச் சேனாபதி காஞ்சிக்கே போயிருப்பதாக வல்லவா கேள்வி?"

"அதுதான் சக்கரவர்த்திக்குக் கோபமாம். 'நீர் சேனாபதி பதவி வகித்தது போதும்' என்று சொல்லி விட்டாராம்."

இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த பரஞ்சோதி "ஐயா! என் குதிரை எங்கே? நானும் சீக்கிரம் கிளம்ப வேண்டும்" என்றான்.

பரஞ்சோதியைப் பற்றி அவர்கள் இன்னும் சிறிது விசாரித்து அவனுடைய ரிஷப இலச்சினையையும் பார்த்து விட்டு, "எங்கே போகிறாய்?" என்று கேட்டார்கள்.

"வடபெண்ணைக் கரையிலுள்ள பௌத்த மடத்துக்குப் போக வேண்டும். இன்னும் எவ்வளவு தூரம் இருக்கும்?" என்று பரஞ்சோதி வினவினான்.

அவர்கள் வஜ்ரபாஹு சென்ற திசையைக் காட்டி, "இந்த வழியே போனால் உச்சி வேளையில் வடபெண்ணைக் கரை சேரலாம். அங்கிருந்து கரையோடு மேற்கே போகவேண்டும். போனால் பாபாக்கினி நதி வடபெண்ணையுடன் கலக்குமிடத்தில் பௌத்த மடம் இருக்கிறது!" என்று கூறி, அவனுடைய குதிரையையும் கொடுத்தார்கள்.

பரஞ்சோதி குதிரைமீதேறிக் கிளம்பியபோது, "அடாடா! வஜ்ரபாஹுவும் இதே வழியில் போகிறவரா யிருக்க, சற்று முன்னாலேயே எழுந்து அவருடனே கிளம்பாமல் போனேனே? அவருடன் போயிருந்தால் வழிப் பிரயாணம் எவ்வளவு உற்சாகமாக இருந்திருக்கும்? களைப்பே தெரியாமல் கதை கேட்டுக்கொண்டு ஆனந்தமாய்ப் பிரயாணம் செய்திருக்கலாமே?" என்று எண்ணமிட்டான்.





போகும் சத்தமும் காதில் விழவே, விழுந்தடித்துக் கொண்டு எழுந்திருந்து வாசற்புறம் சென்றான். அங்கே விடுதித் தலைவனும் காவலர்களும் நின்று தூரத்தில் போய்க்கொண்டிருந்த குதிரையைப் பார்த்த வண்ணமிருப்பதைக் கண்டான்.

"ஓஹோ! வஜ்ரபாஹுவா போகிறார்? அதற்குள்ளே கிளம்பி விட்டாரா?" என்று பரஞ்சோதி வினவியதைக் கேட்டு அவர்கள் அவன் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள்.

"ஐயா! வஜ்ரபாஹு என்கிறவர் யார்? உங்களுக்குத் தெரியுமா?" என்று பரஞ்சோதி அவர்களைப் பார்த்துக் கேட்டான்.

"உன்னைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்றல்லவா நினைத்திருந்தோம்?" என்று காவலர்களில் ஒருவன் கூறினான்.

மலர்ந்தது. பிறகு, விரைவாகவும் உற்சாகத்துடனும் அந்த ஓலைக் கட்டிலிருந்த நாலு ஏடுகளையும் படித்து முடித்தான். ஒரு தடவை படித்த பிறகு, இரண்டாவது தடவையும் ஆரம்பம் முதல் கடைசி வரையில் வாசித்தான்.

பிறகு, பக்கத்தில் வைத்திருந்த வெற்று ஓலையில் நாலு எடுத்து, அதே அளவில் கத்திரித்து வைத்துக்கொண்டு ஏதோ எழுதலானான். துரிதமாக எழுதி முடித்துப் பரஞ்சோதி கொண்டு வந்திருந்த ஓலையையும் இதையும் ஒப்பிட்டு நோக்கினான். பரஞ்சோதியின் ஓலையை அங்கேயே பத்திரப்படுத்தி வைத்து விட்டு எழுந்து தான் எழுதிய ஓலையுடன் பரஞ்சோதியின் அறையை நோக்கிச் சென்றான். அங்கே பரஞ்சோதி இன்னும் தீபத்துக்குப் பக்கத்தில் மயங்கிக் கிடப்பதையும், தீபம் அணையும் தறுவாயில் இருப்பதையும் பார்த்தான். அதோடு அறையில் அப்போது இலேசான புகை — ஒரு வித அபூர்வ மணம் கமழ்ந்து கொண்டிருந்த புகை — சூழ்ந்திருப்பதைக் கண்டான். மூக்கைத் துணியினால் மூடிக்கொண்டு வஜ்ரபாகு அவ்வறைக்குள் நுழைந்தான். ஓலை முன்னே கிடந்த இடத்திலேயே தான் கொண்டு வந்த ஓலையைப் போட்டு விட்டுத் தீபத்தில் பற்றி எரிந்துகொண்டிருந்த திரியை உள்ளுக்கு இழுத்து எண்ணெயில் நனைத்து அணைத்தான். இவ்வளவும் அதிசீக்கிரமாகச் செய்து விட்டு, அறையை விட்டு வெளியேறினான்.

மீண்டும் தன்னுடைய அறைக்குச் சென்ற வஜ்ரபாஹு, பரஞ்சோதியிடமிருந்து தான் அபகரித்து வந்த ஓலையை இன்னொரு தடவை நன்றாய்ப் படித்துப் பார்த்துவிட்டு, அதை ஏடு ஏடாக எடுத்து, விளக்கின் ஜுவாலையில் காட்டிச் சாவகாசமாகத் தகனம் செய்தான். அப்படித் தகனம் செய்து கொண்டிருந்தபோது அவனுடைய மூளை தீவிரமாகச் சிந்தனை செய்து கொண்டிருந்தது என்பதை அவனுடைய முகக்குறி காட்டியது.

நாலு ஏடுகளையும் எரித்துச் சாம்பராக்கிய பிறகு, இன்னும் நாலு வெற்று ஏடுகளை எடுத்து எழுத்தாணியினால் எழுதத் தொடங்கினான். முன்போல் இம்முறை அவன் வேகமாகவும் இடைவிடாமலும் எழுதவில்லை. இடையில் நிறுத்தி நிறுத்தி யோசித்து யோசித்து எழுதினான். அவன் எழுதி முடித்து ஒரு தடவை படித்துப் பார்த்து விட்டு, ஓலை ஏடுகளைக் குழாயில் போட்டபோது, பலபலவென்று கிழக்கு வெளுத்தது. உச்சி வானத்துக்குச் சற்று மேற்கே காணப்பட்ட அர்த்த சந்திரன் பிரகாசத்தை இழந்து பாண்டு வர்ணம் அடைந்து கொண்டிருந்தது. விண்மீன்களும் ஒளிகுன்றத் தொடங்கின. பட்சிகளின் குரல்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாய்க் கேட்கலாயிற்று.

* * *

பரஞ்சோதி கண் விழித்துப் பார்த்தபோது, அறைக்குள்ளே பலகணி வழியாக உதய நேரத்தின் இளம் வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. அருகில் தரையில் கிடந்த ஓலையை அவன் ஆர்வத்துடன் தாவி எடுத்துக்கொண்டு அதை உடனே குழாயில் போட்டு இடுப்பிலும் செருகிக் கொண்டான். முதல் நாள் இரவில் அவன் முதலில் மேடையில் படுத்துக் கொண்டது, பயங்கரக் கனவு கண்டது, வஜ்ரபாஹுவும் விடுதித் தலைவனும் வந்து விளக்கு வைத்து விட்டுப் போனது, தூக்கம் பிடியாமல் விளக்கண்டை வந்து ஓலையைப் படிக்கத் தொடங்கியது, கண்ணைச் சுற்றிக்கொண்டு தூக்கம் வந்தது — ஆகிய எல்லாம் அவனுடைய நினைவுக்கு வந்தன. அவன் தலை இன்னும் சிறிது இலேசாகச் சுற்றிக் கொண்டிருந்தது. வயிற்றிலும் கொஞ்சம் சங்கடம் இருந்தது. ஏதோ ஒரு வாசனை வெகு இலேசாக அவ்வறையில் இருப்பதையும் அவன் உணர்ந்தான். ஆனால் இதிலெல்லாம் அவனுடைய கவனம் அதிக நேரம் நிற்கவில்லை. "ஓலையை அவ்விதம் தரையில் போட்டு விட்டு இவ்வளவு நேரம் தூங்கி விட்டோமே, என்ன அசட்டுத்தனம்!" என்கிற எண்ணத்தினால் ஏற்பட்ட வெட்கம் மற்ற நினைவுகளையெல்லாம் போக்கடித்தது. அதே சமயத்தில் தூரத்தில் குதிரை

போகச் சொல்கிறேன்" என்றான் வஜ்ரபாஹு.

அவ்விதமே தீபத்தை வைத்து விட்டு வஜ்ரபாஹுவும் விடுதித் தலைவனும் அங்கிருந்து சென்றார்கள்.

அவர்கள் போன பிறகு பரஞ்சோதி கண்களை மூடிக்கொண்டு தூங்கப்பார்த்தான். ஆனால் தூக்கம் வரவே இல்லை. புரண்டு புரண்டு பார்த்தான். எழுந்து உட்கார்ந்தான். மறுபடியும் படுத்தான். அப்படியும் தூக்கம் வரவில்லை. அவர்கள் வைத்து விட்டுப் போன தீபம் ஒரு பக்கம் அவனுடைய கண்களைக் கூசச் செய்தது. விளக்கை அணைத்து விடலாமா என்று ஒரு கணம் நினைத்தான். உடனே வேறு ஒரு நினைவு பளிச்சென்று தோன்றிற்று. எழுந்து உட்கார்ந்து தலைமாட்டில் துணியைச் சுற்றி வைத்திருந்த மெல்லிய சிறு மூங்கிற் குழாயை எடுத்தான். அதற்குள்ளிருந்த ஓலைக் கத்தையை வெளியில் எடுத்துக்கொண்டு தீபம் வைத்திருந்த இடத்துக் கருகில் சென்று உட்கார்ந்தான்.

ஓலையைப் பிரித்து வைத்துக் கொண்டு உற்றுப் பார்த்தான். ஆகா! என்ன ஏமாற்றம்! அதில் ஏதோ எழுதியிருந்தது; மிக நெருக்கமாக எழுதியிருந்தது; நாலு ஓலை நிறைய எழுதியிருந்தது. ஆனால் என்ன எழுதியிருந்தது? அதுதான் தெரியவில்லை. அதில் எழுதியிருந்தது தமிழ் எழுத்து அல்ல. ஸம்ஸ்கிருதமோ, பிராகிருதமோ, பாலியோ தெரியவில்லை. ஆகா! கல்வி என்பது எவ்வளவு அவசியமானது? தாய் பாஷை ஒன்று தெரிந்தால்கூடப் போதாது. ஒரு தேசத்தில் வழங்கும் மற்ற பாஷைகளும் தெரிந்திருக்கவேண்டும். இத்தனை காலமாகக் கல்வி பயிலாமல் — தமிழைக்கூட நன்றாய்ப் பயிலாமல் — காலங் கழித்து விட்டதை நினைத்துப் பரஞ்சோதி அப்போது வருத்தப் பட்டான்.

ஆனால் இத்தனை காலங் கழித்துத்தான் காஞ்சிக்குக் கல்வி பயில்வதற்காகக் கிளம்பி வந்தோமே? அதாவது நடந்ததா? நாம் வந்த சமயத்தில் தானா இந்த யுத்தக் குழப்பங்கள் எல்லாம் வரவேணும்! வரும் வழியில் அந்தப் புத்த பிக்ஷுவை ஏன் சந்தித்தோம்! அதனால்தானே இந்த அநாவசியமான ஆபத்து நிறைந்த பிரயாணம் தொடங்கவேண்டி நேரிட்டது? — இப்படி எண்ணமிட்டுக் கொண்டேயிருந்த போது பரஞ்சோதிக்குத் தூக்கம் வருகிறாப்போல் இருந்தது. கண்ணிமைகள் கனத்துத் தாமாகவே மூடிக்கொள்ளப் பார்த்தன. தலை சிறிது சுற்றுவதுபோலிருந்தது. தீபத்தடியிலிருந்து எழுந்து ஏற்கெனவே படுத்திருந்த மேடைக்குப் போகப் பரஞ்சோதி எண்ணினான். ஆனால், அந்த எண்ணத்தை அவனால் நிறைவேற்ற முடியவில்லை. தூக்க மயக்கம் அப்படி அவனை மீறி மேலோங்கிற்று. அப்படியே தரையில் படுத்தான். சிறிது நேரத்தில் ஸ்மரணையற்ற நிலையில் ஆழ்ந்தான். அவன் கையிலிருந்து நழுவிய ஓலைக் கத்தை தரையில் கிடந்தது.

* * *

சற்றுப் பொறுத்து அறைக் கதவு மெதுவாகத் திறந்தது. வஜ்ரபாஹு ஓசைப்படாமல் உள்ளே வந்தான். தரையில் கிடந்த ஓலைக் கத்தையைக் கையில் எடுத்துக்கொண்டு கதவை மீண்டும் சாத்திக்கொண்டு வெளியேறினான்.

வெளியேறிய வஜ்ரபாஹு இரண்டு மூன்று அறைகளைக் கடந்து சென்று விடுதியின் ஒரு மூலையில் இருந்த பெரிய அறைக்குள் புகுந்தான். அங்கே குத்து விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. அதன் அருகில் உட்கார்ந்து பரஞ்சோதியிடமிருந்து அபகரித்துக்கொண்டு வந்திருந்த ஓலையைக் கவனமாகப் படிக்கலானான்.

முதலில் சற்று நேரம் அவன் முதல் ஏட்டையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது அவனுடைய புருவங்கள் நெரிந்தன. நெற்றி சுருங்கிற்று. பொறுமையிழந்து ஆத்திரங் கொள்வதற்குரிய அறிகுறிகள் முகத்தில் தென்பட்டன. சில சமயம் மேலே நிமிர்ந்து கூரையை நோக்கிய வண்ணம் யோசித்தான். சில சமயம் கையை நெரித்துக் கொண்டு பூமியை நோக்கிய வண்ணம் சிந்தித்தான். சற்று நேரம் தீபத்தை உற்று நோக்கிக்கொண்டிருந்தான். கடைசியாக அவனுடைய முகம் பளிச்சென்று




## அத்தியாயம் 33

# ஓலைத் திருட்டு

**அ**ப்போது வஜ்ரபாஹு, "தம்பி! பொறு! வேலைக் கைப்பற்றுவதற்குப் பதிலாகப் பொறுமையைக் கைப்பற்று. நாங்கள் பேய் பிசாசு இல்லை. 'பிசாசு சொப்பனம் கண்டு உளறி அடித்துக் கொண்டு எழுந்திரா?' என்று என்னைப் பரிகாசம் செய்தாயே? நீ பிசாசு சொப்பனங் கண்டு அலறுகிற அலறலில் இந்த விடுதியில் உள்ள எல்லாருமல்லவா உளறியடித்து எழுந்திருக்க வேண்டியிருக்கிறது?" என்றான்.

பரஞ்சோதியோ தான் அத்தகைய கனவு கண்டது உண்மையென்ற எண்ணத்தினால் வெட்கமடைந்து ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

பிறகு, "பொழுது விடிந்து விட்டதா? புறப்படலாமா?" என்று கேட்டான்.

"அழகுதான்! நாம் தூங்க ஆரம்பித்து ஒரு நாழிகைகூட ஆகியிராது. இப்போது அர்த்த ராத்திரி. விடுதியில் பத்திரமாய்ப் படுத்திருக்கும் போதே இப்படிப் பயந்து உளறுகிறவன், கடுநிசியில் தனி வழியே எப்படிப் போவாய்? அப்படிப் போவதாயிருந்தால், 'அம்மா!' 'அம்மா!' என்று கனவில் அலறினாயே, அந்தப் புண்ணியவதி எங்கே இருக்கிறாள் என்றாவது சொல்லி விட்டுப் போ! பிள்ளையின் கதியைப் பற்றி அவளுக்குச் செய்தியாவது சொல்லி அனுப்புகிறோம்" என்றான் வஜ்ரபாஹு.

இந்த வார்த்தைகள் எல்லாம் கூரிய முட்களைப்போல் பரஞ்சோதியின் உள்ளத்தில் சுரீல் சுரீல் என்று தைத்தன.

"நீங்கள் நேற்று சாயங்காலம் என்ன வெல்லாமோ பயங்கரமான கதைகளைச் சொன்னீர்கள் அல்லவா? அதனால்தான் சொப்பனம் காணும்படி ஆயிற்று" என்று பரஞ்சோதி சமாதானம் சொன்னான்.

"இல்லை, அப்பா, இல்லை! அந்த மாதிரிக் கதைகள் நீ இன்னும் அதிகமாய்க் கேட்க வேண்டும். தமிழில் பரணி என்று ஒரு நூல் இருக்கிறதே, உனக்குத் தெரியுமா?"

பரஞ்சோதி மௌனம் சாதித்தான்.

"ஆமாம்; நீ தான் தமிழ் படிப்பதற்காகக் காஞ்சிக்குப் புறப்பட்டு வந்தேன் என்று சொன்னாயே? பரணி என்கிற நூலில், போர்க்களத்தில் பிசாசுகளும் பேய்களும் வந்து கூத்தாடுகிறதைப் பற்றி வர்ணித்திருக்கும். அம்மாதிரி யெல்லாம் படித்து விட்டால், அப்புறம் பிசாசு பயமே இராது என்பதற்குத்தான் அப்படி ஒரு காவியத்தைப் பெரியோர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்......போகட்டும்; இனிமேலாவது சற்று நேரம் நிம்மதியாய்த் தூங்கு. இந்தத் தீபத்தை இங்கேயே வைத்துவிட்டுப்

# பலசரக்கு



மகா கனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியார் 'கல்கி' தீபாவளி மலருக்குப் 'பங்காளிக் காய்ச்சல்' என்ற சிறு கதை எழுதி அனுப்பியிருந்தார். கதையை அச்சுக் கோத்து, 'ப்ரூப்'பை அவர் திருத்தத்துக்காக அனுப்பியபோது அவரிடமிருந்து பின்கண்ட பதில் கிடைத்தது: "தயவு செய்து எனக்கு 'ப்ரூப்' அனுப்பாதீர்கள். இருக்கிற தப்பைத் திருத்துவதற்குப் பதில் நான் புதுத் தப்புகள் போட்டு விடலாம்."

★



வட ஆப்பிரிக்க யுத்தம் தொடங்குவதற்கு முன், நேசப் படைத் தலைவரான ஐஸன் ஹவர் ஒரு வேடிக்கையான காரியம் செய்தார். யுத்த நிருபர்கள் யுத்த ரகசியங்களை முன்னதாகவே அறிந்துகொண்டவர்களைப் போல சாடு விடுகிறவர்கள் அல்லவா? அவர்களை மட்டந் தட்டுவதற்காகத்தான் ஐஸன்ஹவர் இந்தக் காரியம் செய்தார்.

அதாவது, தமது படைகளுக்கு ஆர்டிக் பிரதேசம் போன்ற இடங்களில் அணியும் உடுப்புகளை அணிவித்தார். தமது வேலையாளை விட்டுத் தமக்கும் கனத்த கம்பளிச் சட்டைகள் வாங்கிவரச் சொன்னார். "ஓஹோஹோ! நார்வேயைத் தாக்கப் போகிறார்கள் போலிருக்கிறது! அதனால்தான் கம்பளி உடைகள் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்" என்று நினைத்து யுத்த நிருபர்கள் சாடு விட ஆரம்பித்தார்கள். அதை நம்பி ஜெர்மன் ராணுவம் நார்வேயில் பலத்த தற்காப்புகளைச் செய்ய ஆரம்பித்தது. யுத்த நிருபர்கள் போர் முனைக்குப் போவதற்காகக் கம்பளிச் சட்டை தைத்துக் கொண்டார்களாம். சிலர் நார்வே பாஷா போதினியும் கையுமாகக்கூடக் கப்பல் ஏறினார்களாம்!



யுத்தத்துக்கு முன்பு ஜப்பானில் வசித்த ஒரு அமெரிக்கர் தம் தாய் நாட்டில் உள்ள நண்பருக்கு எழுதிய கடிதத்தில் "இன்னும் எத்தனையோ விஷயங்கள் எழுத வேண்டியிருக்கிறது. ஆனால் இந்த ஜப்பானியப் பிசாசுகள் தணிக்கை செய்து விடுவார்கள்" என்று எழுதியிருந்தார். சில நாட்களுக்குப் பிறகு இந்தக் கடிதம் இவருக்குத் திருப்பி வந்தது. அதில் ஜப்பானியத் தணிக்கை அதிகாரி பின்வருமாறு எழுதியிருந்தார். "தாங்கள் எங்களைப் பற்றிக் கொண்டிருக்கும் அபிப்பிராயம் மிகவும் தவறானது. நாங்கள் கடிதங்களைப் பிரித்துப் பார்ப்பதே கிடையாது."

★



தென்னாப்பிரிக்காவின் பிரதம மந்திரியான ஜெனரல் ஸ்மட்ஸை எதிர்க் கட்சித் தலைவர், ஏதோ ஒரு இனம் விஷயமாக எவ்வளவு செலவாயிற்று என்று பார்லிமெண்டில் புள்ளி விவரம் கேட்டார். அதற்கு ஸ்மட்ஸ் உடனே, எட்டு கோடியே, ஒரு லட்சத்து அறுபத்து ஒன்பதாயிரம் பவுன், பத்து ஷில்லிங், ஆறு பென்ஸ் என்று பளிச்சென்று பதில் அளித்தார். ஸ்மட்ஸ் இத்தனை கணக்காகப் புள்ளி விவரம் தெரிவித்தது பற்றி எதிர்க்கட்சித் தலைவர் உள்பட எல்லாரும் திகைத்து விட்டனர். அடுத்த நாள் ஸ்மட்ஸின் நண்பர் ஒருவர், "இவ்வளவு கணக்காக எப்படிப் புள்ளி விவரங்கள் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறீர்?" என்று கேட்டார். அதற்கு ஸ்மட்ஸ், "புள்ளியாவது, விவரமாவது! ஏதோ வாயில் வந்த எண்ணிக்கையைச் சொல்லி வைத்தேன். நான் சொன்ன எண்ணிக்கை தவறு என்று நிரூபிப்பதற்கே இரண்டு மாதமும், இருபது குமாஸ்தாக்களும் வேண்டும்" என்று சிரித்துக்கொண்டே பதில் சொன்னார்.

வித்வானுக்கு நல்ல பெயரை வாங்கிக் கொடுப்பார்.

இளம் பாடகர்களுக்கு வாசிக்கும்போதோ, அவர்களுடைய பாட்டை ரசித்து உற்சாகப் படுத்தியும், அவர்களிடம் குறைவாக உள்ள அம்சங்களைத் தாம் இட்டு நிரப்பியும், தனி ஆவர்த்தனங்களில் சக்கைப் போடாக வாசித்தும், மொத்தத்தில் கச்சேரி 'ஜம்' என்று சிறக்கும்படி செய்து விடுவார். இளம் வித்வான் தானே என்று அலட்சியமாய் வாசிப்பது, பிடிலைக் கீழே வைத்து விட்டு ஆகாசத்தைப் பார்ப்பது முதலிய காரியங்களை அவரிடம் காணமுடியாது.

எனவே, பெரிய வித்வான்கள், இளம் வித்வான்கள் எல்லாருமே ஸ்ரீ ராஜமாணிக்கத்தின் பக்க வாத்தியத்தை விரும்புவது இயல்பே யல்லவா?

இந்த நிலைமையில், தஞ்சாவூர் ராஜுவைப்போல் வித்தைத் திறமையினாலேயே முன்னுக்கு வர விரும்பும் வித்வான்களுக்கு ஸ்ரீ ராஜமாணிக்கத்தின் பக்க வாத்தியம் கிடைப்பது அபூர்வந்தான்.

அப்படி அபூர்வமாகக் கிடைத்த பக்க வாத்தியத்தைப் பூரணமாய் அநுபவிக்க விரும்பிய தஞ்சாவூர் ராஜு, பிள்ளைவாளை அடிக்கடி தனி ஆவர்த்தனம் வாசிக்கும்படி கேட்டுக்கொண்டதிலும் ஆச்சரியம் இல்லை; அப்படியே பிள்ளைவாளும் தேன் மாரியாகப் பொழிந்து சபையோரின் செவிகளெல்லாம் பலநாள் தித்தித்திருக்கும்படி செய்ததிலும் வியப்பில்லை.

இவ்வளவுடன், கும்பகோணம் செங்கு வய்யங்கார் மிருதங்கமும் நமது மதராஸ் வேணு நாயக்கரின் கஞ்சிராவும் சேர்ந்து கச்சேரி சோபிப்பதற்குத் துணை செய்தன.

கும்பகோணம் செங்குவய்யங்கார் மிருதங்க வாத்தியக் கலையில் கைதேர்ந்த பழைய புலி; ஸ்ரீ நாயனாப் பிள்ளை முதலியவர்களுக்கு வாசித்துப் புகழ் பெற்றவர். அவருடைய வாசிப்பில் நல்ல சுகபாவமும் மதுரமும் இருக்கின்றன. ஆனால் மாறியுள்ள கால நிலைமையினால் அவருடைய வாசிப்பில் சிறிது உற்சாகக் குறைவு காணப்பட்டது.

கொஞ்ச காலமாகவே தமிழ் நாட்டில் தாள வாத்தியங்களை அனுபவிப்பதில் அதிகமாக ருசி ஏற்பட்டுவருகிறது. இந்த ருசி வளர்வதற்கு ரேடியோக்காரர்கள் ஓரளவு ஒத்தாசை செய்திருக்கிறார்கள்.

ஒரு காலத்தில், பாலக்காட்டு மணி ஐயரின் மிருதங்கமும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திப் பிள்ளையின் கஞ்சிராவும் அமோகமாக முழங்கிக் கொண்டிருக்கும்போது, சபையோர் அலுப்படைந்து கையைத் தட்டி நிறுத்தும்படி செய்ததுண்டு!

இப்போது அப்படி யில்லை. தாள வாத்தியங்களின் முக்கால் மணி நீண்ட தனி ஆவர்த்தனத்தைக் கூடச் சபையோர் பொறுமையுடன் கேட்கிறார்கள்; ரஸிக்கவும் ரஸிக்கிறார்கள்.

தாள வாத்தியங்களில், கஞ்சிராவை ஜனங்கள் பெரிதும் ரஸிக்கும்படி செய்து, அந்த வாத்தியத்தைச் சங்கீத மேடையில் நிலை நாட்டிய பெருமையில் ஸ்ரீ வேணு நாயக்கருக்குக் கௌரவமான பங்கு உண்டு.

லய நிபுணத்வத்தை மட்டும் காட்டும் நோக்கத்துடன் கஞ்சிராவைக் கையாண்டால், அதில் 'தப்' 'திப்' என்ற பறைக் கொட்டு சப்தங்கள் ஏற்பட்டுச் சில சமயம் கர்ண கடூரமாகி விடுகிறது.

ஸ்ரீ வேணு நாயக்கரின் வாசிப்பில் அம்மாதிரி ஏற்படுகிறதே யில்லை. கஞ்சிராவில் அவருடைய விரல்கள் அதி லாகவத்துடன் இயங்கும்போது செவிக்கினிய மதுரமான சப்தங்களே உண்டாகின்றன.

மிருதங்கத்தின் 'கும்' என்ற நாதத்துடன், கஞ்சிராவின் 'ஜல் ஜல்' ஒலியும் அழகாகக் கலந்து, தாள வாத்தியங்களின் தனி ஆவர்த்தனம் நீண்டு கொண்டே போனாலும் ரஸிக்கும்படியாகி விடுகின்றது.

ஸ்ரீ பஞ்சாபகேச பாகவதர் காலத்திலிருந்து மகா மகா வித்வான்களுக்கெல்லாம் வாசித்துப் புகழ் பெற்ற ஸ்ரீ வேணு நாயக்கர் இன்று மிருதங்கத்தையும் கஞ்சிராவையும் சமமான ஆற்றலுடன் கையாண்டு பெரிய வித்வான்கள், இளம் வித்வான்கள் எல்லாருக்கும் வித்தியாசமின்றி ஒத்தாசையாக வாசித்து வருகிறார். கர்நாடக சங்கீதத்துக்கு இவர் செய்து வரும் தொண்டு நீடித்து நெடுங்காலம் நடக்க வேண்டும்.

---

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழில் வெளியான "உவமை அதிசயம்" என்னும் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எம். கோபாலகிருஷ்ணன், புளியந்தோப்பு, சென்னை.

# "ஒரு நல்ல கச்சேரி"

மயிலை சங்கீத சபையில் மே மீ 7உ தஞ்சாவூர் லக்ஷ்மிநாராயணய்யரின் கச்சேரியைக் கேட்டுக் கொண்டிருந்த போது, எனக்குப் பின்னால் இரண்டு ரஸிகர்களிடையே விவாதம் எழுந்தது. "அடித்து விடுவேன்!" என்ற கோபக் குரலைக் கேட்டதும், "இதென்ன, சங்கீதக் கச்சேரியில் மாஜிஸ்டிரேட் விவகாரம்!" என்று கவனித்தேன். பேச்சு, பாடகரைப் பற்றித்தான் என்று தெரிந்தது. "ஜூனியர் வித்வான்களுக்குள் இவர்தான் முதல் நம்பர்!" என்று ஒரு ரஸிகர் சொல்ல, அதை மறுத்து இன்னொரு ரஸிகர், "இவரை இனிமேல் 'ஜூனியர் வித்வான்' (இளம் பாடகர்) என்று சொன்னால் அடித்து விடுவேன்!" என்று பயமுறுத்திக் கொண்டிருந்தார்.

மேலும் அவர், "இவர் ஸீனியர் வித்வான் இல்லையென்றால், வேறு யார் ஸீனியர் வித்வான்? விசாலை மடக்கும் பார்க்கலாம்! பழைய கிழவர்களையே மனையில் எடுத்து வைத்துக்கொண்டிருந்தால், ஜூனியர் வித்வான்கள் எப்போதுதான் ஸீனியர்கள் ஆவது?" என்று காரசாரமாகச் சண்டை போட்டார்.

அப்போது தஞ்சாவூர் காணு சங்கராபரண ராகத்தை அமோகமாக ஆலாபனம் செய்து விட்டுக் கரகோஷத்துடன் முடித்திருந்த சமயம். இன்னும் கீர்த்தனம் ஆரம்பிக்க வில்லை. அந்த இடை வெளியில் மேற்படி ரஸிகர் அவ்விதம் பேசிய படியால்தான் பிழைத்தார்; பாடும்போது இரைந்து பேசியிருந்தால் பக்கத்திலுள்ளவர்கள் அவரை அடித்திருப்பார்கள்!

அவ்வளவு சிரத்தையுடனும் ஆர்வத்துடனும் சபையோர் அன்று தஞ்சாவூர் காணுவின் கச்சேரியைக் கேட்டார்கள். நல்ல சங்கீதத்தைக் கேட்டுக் கேட்டு, பண்பட்டுப் பழுத்த மயிலாப்பூர் ரஸிகர்கள் அவ்வளவு சிரத்தையாகத் தஞ்சாவூர் காணுவின் கச்சேரியைக் கேட்டதே, அவர் பெரிய கச்சேரி வித்வான் ஆகிவிட்டார் என்பதற்கு அறிகுறியாயிருந்தது.



இத்தனைக்கும் தஞ்சாவூர் காணு அன்றைக்குத் தமது முழு வித்வத்தையும் சாமர்த்தியத்தையும் வெளிப் படுத்தியதாகச் சொல்ல முடியாது. வித்வத்தை அடக்கி அடக்கி வைத்துக் கொண்டுதான் வெளியில் விட்டார். உதாரணமாக, அன்றைக்கு முக்கிய ராகமாகப் பாடிய காம்போஜியை முந்திய கச்சேரிகளில் இதைக் காட்டிலும் எவ்வளவோ விகசிதமாகப் பாடி நான் கேட்டிருக்கிறேன். இன்றைக்கோ, சபையில் விசேஷ குதூகலத்தை உண்டாக்கிவிடக் கூடாதென்று சிரமப்பட்டுக் குறைத்துப் பாடியதாகத் தோன்றியது. அதேமாதிரி ஸ்வரம் பாடுவதிலும். தோடி கீர்த்தனத்தின் ஸ்வரத்திலேதான் அவருடைய ஆற்றலை ஏறக்குறைய ஒருவாறு வெளிப்படுத்தினார்.

இப்படியெல்லாம் ஆற்றலை அடக்கியும் சக்தியைக் குறைத்துக் கொண்டும் தஞ்சாவூர் காணு பாடின போதிலும், அன்றைக்குக் கச்சேரி மொத்தத்தில் முதல்தர வெற்றியாக அமைந்து விட்டது.

இதற்கு முக்கிய காரணம் அன்று ஏற்பட்டிருந்த பக்க வாத்தியங்களின் சேர்க்கையென்று சொல்லலாம்.

பாடகர் அடக்கத்துடன் பாடியதற்கும் அதுதான் காரணம்; கச்சேரியின் உயர்வுக்கும் அதுதான் காரணம்.

பிடில் ராஜமாணிக்கம் பிள்ளையிடம் தஞ்சாவூர் காணு காட்டிய பயபக்தி பழைய காலத்துக் குரு-சிஷ்ய பாவத்தை நினைவூட்டுவதா யிருந்தது.

இதற்குத் தகுந்த முகாந்திரம் இல்லாமற் போகவில்லை.

பிடில் ராஜமாணிக்கம் பிள்ளை பெரிய வித்வான்களுக்குப் பக்க வாத்தியம் வாசிக்கும்போது, அவர்களுடைய முக்கால் கட்டை சுருதிக்கும் அடக்கமாகவும், அவர்களுடைய சாரீர வசதிக் குறைவு தெரியாதபடி மறைத்தும், அவர்களைவிட எவ்விதத்திலும் ஒரு சங்கதி கூட அதிகமாகப் போடாமலும் வாசித்துப் பாடும்

கூறுகிறார். ஆனால் யார் அப்படிப் பாய்கிறார்கள் என்று சொல்லவில்லை. வீணை தனம்மாளும் பிடில் கோவிந்தசாமிப் பிள்ளையும் நிரவலை அருமையாகக் கையாண்டார்கள் என்று சொல்கிறார். ஒத்துக் கொள்கிறோம். ஆனால் அவர்களுடன் நிரவல் கலையும் மாண்டு விட்டதா, இப்போது யாராவது நல்ல முறையில் நிரவலைக் கையாளுகிறவர்கள் உண்டா என்று அவர் சொல்லவில்லை. இருக்கிறவர்களைப் பற்றிச் சொன்னால் இளம் பாடகர்கள் பின்பற்றுவதற்குச் சௌகரியமாயிருக்குமே?

கடைசியாக, பத்திரிகைகளில் வரும் சங்கீத விமரிசனங்களைப் பற்றிச் செம்மங்குடி தமது கோபத்தை வெளிப்படுத்தியிருக்கிறார். தமிழ் நாட்டுப் பத்திரிகைகளில் பத்து வருஷத்துக்கு மேலாகச் சங்கீத விமரிசனங்கள் வந்துகொண்டிருக்கின்றன. அப்போதெல்லாம் செம்மங்குடி பத்திரிகை விமரிசனங்களை ஆட்சேபிக்கவில்லை. இப்போதுதான் ஆட்சேபிக்கிறார். அதற்குக் காரணமும் இருக்கிறது. முன்னெல்லாம் செம்மங்குடியின் பாட்டைக் குறித்துப் பிரமாதமான விமரிசனங்கள் பத்திரிகைகளில் வெளியாகும். அவருக்குச் சாரீர வசதி குறைந்த பிறகு, அவ்விதம் வருவதில்லை. மற்ற வித்வான்களுடைய பாட்டு நன்றாயிருக்கிறது என்று படிக்கும்போது சீனிவாசய்யருக்கு கோபமும் எரிச்சலும் பொங்கிச் சங்கீத விமரிசனமே கூடாதென்று தோன்றுவது சகஜந்தான்.

■ செம்மங்குடிக்குப் பிடிக்காவிட்டால், அவர் வேணுமானால் விமரிசனங்களைப் படிக்க வேண்டாம். அதற்காகப் பத்திரிகைக்காரர்களுக்கு உலகெங்கும் உள்ள ஓர் உரிமையை அவர் பறிக்க விரும்புவது நியாயமாகாது; முடியவும் முடியாது.

அதைக் காட்டிலும், சங்கீதத்தைப்பற்றிப் பேசுவதை நிறுத்துவது மிகவும் முக்கியமானது என்று நான் கருதுகிறேன். வீணை தனம்மாள் கூட "சங்கீதத்தைப் பாட வேண்டும்; கேட்கவேண்டும்; சங்கீதத்தைப் பற்றிப் பேசக்கூடாது" என்று சொல்லுவார் என்பதாகச் செம்மங்குடி அன்றையப் பிரசங்கத்திலேயே கூறியிருக்கிறார். "சுதேசமித்திரன்" ரிப்போர்ட்டின்படி வீணை தனம்மாளின் இந்த உத்தமமான உபதேசத்தைச் செம்மங்குடியும் மற்ற வித்வான்களும் கடைப்பிடித்தால் சர்வ சிலாக்யமாயிருக்கும்.

"சங்கீதத்தைப்பற்றி எழுதக்கூடாது" என்று வீணை தனம்மாள் சொல்லவில்லையென்பதையும் கவனிக்கவேண்டும். "பேசக்கூடாது!" என்று தான் சொல்லியிருக்கிறார். தகுந்த காரணத்துடன் தான் சொல்லியிருக்கிறார். எழுதுகிறவன், தான் எழுதுகிறது அச்சில் ஸ்திரமாக வரப்போகிறது, அதில் குறைகள் இருந்தால் நாலுபேர் எடுத்துக் காட்டுவார்கள், தன்னுடைய எழுத்துக்கு மதிப்பு இராது என்பதை உணர்ந்து நிதானமாக எழுதுகிறான். ஒரு தடவைக்கு நாலு தடவையாகப் பார்த்து அச்சுப் போடுகிறான். ஆனால், பேசுகிறவனுக்கோ இந்த நிர்ப்பந்தம் கிடையாது. எதிரில் இருப்பவர்கள் திருப்தியடையும்படி எதையாவது உளறிக் கொட்டத் தோன்றி விடுகிறது. பேச்சுக்குத் தக்கு தடை யிருப்பதில்லை.

ஆகவே, சங்கீதத்தைப்பற்றிய பேச்சைத் தான் முதலில் நிறுத்தவேண்டும். பேச்சு நின்றால், பிதற்றலும் நிற்கும். விவகாரங்களும் விவாதங்களும் நின்றுவிடும். முக்கியமாக, சங்கீதத்தைப் பற்றிய விவாதங்கள் கட்டாயம் நின்று விடும்.

பிறகு, உண்மையான சங்கீத வளர்ச்சி ஏற்படும் மார்க்கத்தை எல்லாருமாகச் சேர்ந்து தேடலாம்.

தமிழ்ப் பாட்டுப் பாடவே மறுக்கிறார் என்று ஒரு வதந்தி பரவியிருக்கிறது. இது தவறு என்று இப்போது ஏற்படுகிறது. "கட்டாயமாய்த் தமிழ்ப் பாட்டே பாடவேண்டும்" என்று சொல்வதைத்தான் செம்மங்குடி ஆட்சேபிப்பதாகத் தெரிகிறது. உண்மையில் தமிழிசை மகாநாட்டில்கூடக் "கட்டாயமாக எல்லாம் தமிழ்ப்பாட்டே பாடவேண்டும்" என்று கட்டாயப் படுத்தவில்லை. பெரும்பாலும் தமிழ்ப் பாட்டுப் பாட வேண்டுமென்றுதான் கேட்டுக் கொண்டார்கள். அது போனால் போகட்டும்.

இப்போது, கட்டாயப் படுத்தாத இடங்களில் தமிழ்ப் பாட்டாகவே பாடிக் கச்சேரி செய்ய அவர் ஒத்துக்கொள்கிறார் என்பதுதான் முக்கியமான விஷயம்.

"முழுதும் தமிழ்ப்பாட்டாகவே பாடத் தயாராயிருக்கிறேன்" என்று செம்மங்குடி சீனிவாசய்யர் சொல்வதிலிருந்து முழுமையும் தமிழ்க் கச்சேரியாகவே செய்யக் கூடிய அளவுக்குத் தமிழில் நல்ல கீர்த்தனங்கள் இருக்கின்றன என்று ஏற்படுகிறது. இல்லா விட்டால் செம்மங்குடி சீனிவாசய்யர் அவ்விதம் ஒத்துக்கொள்ள மாட்டார். பணத்துக்காகச் சங்கீதத்தை விற்பதை ஆட்சேபிக்கிறவர், பணத்துக்காகத் தமிழ்ப் பாட்டுக் கச்சேரி செய்கிறேன் என்று முன்வர மாட்டார். "தமிழில் நல்ல கீர்த்தனங்கள் இருக்கின்றன; தமிழ்ப் பாட்டாகவே பாடி உயர்ந்த கச்சேரி செய்யலாம்" என்று பரிபூரணமாக நம்புவதினாலேயே அவர் அவ்விதம் ஒத்துக் கொண்டிருக்கிறார்.

இவ்வளவு தூரம் ஒத்துக்கொண்ட செம்மங்குடி சீனிவாசய்யர், தமிழிசை இயக்கத்தின்மேல் அநாவசியமான புகார் சொல்ல முற்பட்டதுதான் ஆச்சரியத்தை அளிக்கிறது. அவ்வளவு தமிழ்ப் பாட்டுக்கள் இருக்கும்போது, தமிழாகவே கச்சேரி செய்வதும் சாத்தியமாயிருக்கும்போது, தமிழ்ப் பாட்டுப் பாடக்கூடாது என்று வித்வான்களைக் கட்டாயப்படுத்திய மியூஸிக் அகாடமியின் சங்கீத பண்டிதர்கள் மீது அவர் உண்மையில் புகார் சொல்லியிருக்க வேண்டும்.

தமிழிசை இயக்கத்தினால் ஏதாவது கெட்ட பலன்கள் ஏற்பட்டிருக்குமானால், அதற்குப் பூரண பொறுப்பாளிகள் மேற்படி மியூஸிக் அகாடமி பண்டிதர்களே யாவார்கள். "சங்கீதத்தின் தரம் குறையாமல் தமிழ்ப் பாட்டுக்களையும் அபிவிருத்தி செய்கிறோம்" என்று அகாடமி தீர்மானம் செய்திருக்கும் பட்சத்தில், பழைய காலத்துச் சிறந்த தமிழ் ஸாஹித்யங்களைச் சேகரிக்கவும் பிரபலப் படுத்தவும் அகாடமி நியாயமான முயற்சி எடுத்திருக்கும் பட்சத்தில், தமிழிசை இயக்கமே தோன்றியிராது. தோன்றியிருந்தாலும் இவ்வளவு பலம் பெற்றிராது.

தமிழிசை இயக்கத்தில் ஏதோ அரசியல் நோக்கம் இருப்பதாகவும், அதனால்தான் அவ்வியக்கத்துக்குத் தம்முடைய மேலான ஆதரவைக் கொடுக்க முடியவில்லையென்றும் செம்மங்குடி ஐயர்வாள் சொல்கிறார். அப்படித் தமிழிசை இயக்கத்துக்குள் புகுந்து கொண்டு நம்மை ஏமாற்றும் அரசியல் நோக்கம் என்னவென்பதை அவர் சொல்லவில்லை. ஏதாவது இருந்தால்தானே சொல்லப் போகிறார்? அரசியல் நோக்கம் என்று யாரோ சொன்னதை அவர் திருப்பி ஒப்பிக்கிறாரே தவிர வேறில்லை.

தமிழிசை இயக்கத்தின் முக்கியமான பிரமுகர் ஒருவரே அதன் அரசியல் நோக்கத்தை வெளிப்படுத்தியிருப்பதாக சமது

வித்வான் சொல்லியிருக்கிறார். ஆனால் அந்த முக்கியமான பிரமுகர் யார் என்று சொல்லவில்லை. அப்படி ஒருவரும் சொன்னதே கிடையாதென்று நான் சொல்கிறேன்.

ஒரு வேளை ஸ்ரீ ஈ. வே. இராமசாமி நாயக்கரைச் செம்மங்குடி குறிப்பிடும் பட்சத்தில், அது பொய்யாகும். ஏனெனில், ஸ்ரீ ஈ. வே. ரா. தமிழிசை இயக்கத்தைச் சேர்ந்தவரே அல்ல. அவாங்க ஜீப்பைப்போல் ஈ. வே. ராவும் சங்கீதத்துக்கே பரம விரோதி.

அப்படியே தமிழிசை இயக்கம் ‘அரசியல் நோக்கம்’ கொண்டதாயிருக்கட்டும்; அக் காரணத்தினால் செம்மங்குடிக்கு அது பிடிக்காமல் போகட்டும். இவரும் இவருடைய சகாக்களும் மியூசிக் அகாடமி பண்டிதர்களைச் சரிப்படுத்தி, அகாடமியின் மூலம் நல்ல முறையில் தமிழ் ஸாஹித்யங்களை வளர்க்கவும் பெருக்கவும் முயல்வது தானே? யார் வேண்டாமென்றார்கள்?

செம்மங்குடியின் பிரசங்கத்தில் மிகவும் முக்கியமான அம்சம் ஸாஹித்யத்தையும் சங்கீதத்தையும் பற்றியது. “நாங்கள் சங்கீத வித்தையை அப்யஸித்தபோது ஸரிகம பதநி என்னும் ஸப்த ஸ்வரமாகிய பாஷையைத்தான் கற்றோம்; ஸாஹித்ய பாஷைகளைக் கற்கவில்லை” என்று அவர் கூறியுள்ளார். செம்மங்குடியைப் பொறுத்த வரையில் இது முக்காலும் உண்மையாகும். அவருடைய சங்கீதம் பிரபலமடைய ஆரம்பித்த சமயத்தில், அவர்,

“ஜீவ ஜீவ ஜீவ என ராதா!” என்று பாடியது பிரசித்தமானது. அப்புறம், தமிழில் பாரதி பாடல்கள் முதலியவை பாடத் தொடங்கிய பின்னர் ஸாஹித்யத்திலும் சிறிது கவனம் செலுத்தத் தொடங்கினார் என்பதும் உண்மைதான்.

ஆனால் அவர் விஷயத்தில் உண்மையாயிருப்பதாலே, எல்லாக் கர்நாடக சங்கீத வித்வான்களையுமே அப்படி ஸாஹித்ய ஞான சூன்யர்கள் என்று அவர் சேர்த்துக் கூறுவதை நான் ஆட்சேபிக்கிறேன். ஸாஹித்யத்தில் பூரண கவனம் செலுத்தி, அக்ஷர சுத்தத்துடனும் இருதய பாவத்துடனும் பாடிய மகாவைத்தியநாதய்யர் முதலிய மகான்களைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறோம். வீணை தனம்மாளும் அவருடைய குமாரிகளும் அவ்விதம் பாடியிருக்கிறார்கள். தற்கால வித்வான்களுக்குள் முசிரி சுப்பிரமண்ய ஐயர் அக்ஷரப் பிழையுடனோ அர்த்தம் தெரியாமலோ எந்தப் பாட்டையும் பாடுவது கிடையாது.

இன்னும், செம்மங்குடி தம்முடைய குறையையே சங்கீதத்தின் மேன்மையாக்கி, “ஸாஹித்யம் அவ்வளவு முக்கியமானதல்ல” என்று கூறுவதையும் நான் ஆட்சேபிக்கிறேன். “ஒன்று ஸாஹித்யமே இல்லாமல் பாடுங்கள்; அல்லது ஸாஹித்யம் பாடுவதாயிருந்தால் சரியாகத் தெரிந்து கொண்டு பாடுங்கள்” என்று கேட்க ரஸிகர்களுக்கு உரிமை உண்டு.

ஸாஹித்யம் அவ்வளவு முக்கியமற்றதாயிருந்தால், ஸ்ரீ தியாகப் பிரம்மத்துக்கு இவ்வளவு மகிமை ஏற்பட்டிராது. அவருடைய இராம பக்தியின் சிறப்பைக் குறித்துப் பேச வேண்டிய அவசியமே இல்லை. அவருடைய மெட்டுக்களை மட்டும் வைத்துக்கொண்டு ஸாஹித்யங்களைத் தள்ளி விடலாம்.

பேச்சின் நடுவில் எவ்வித சம்பந்தமோ பொருத்தமோ இல்லாமல், “தமிழிசைக்காரர்கள் பள்ளிக்கூடங்களில் தமிழை அதிகமாகப் படிக்க ஏற்பாடு செய்வது தானே?” என்று செம்மங்குடி கேட்கிறார். தமிழிசை அன்பர்கள் பெரும்பாலும் தமிழ் அன்பர்களும் கூடத்தான். தமிழை எல்லா வகையிலும் வளர்க்க அவர்கள் முயற்சி செய்து கொண்டுதானிருக்கிறார்கள்.

ஆனால், செம்மங்குடி இவ்விதம் சொல்வதின் அர்த்தம் என்ன? “செம்மங்குடி சீனிவாசய்யர் சங்கீதத்தைக் கட்டிக்கொண்டு ஏன் அழுகிறார்? வேத பாராயணம் செய்யக்கூடாதா?” என்று கேட்டால், அதில் அர்த்தம் உண்டா? அல்லது, “செம்மங்குடி ஏன் வாய்ப்பாட்டுப் பாடுகிறார்? மோர்சிங் அல்லது பிடில் வாசிக்கக்கூடாதா?” என்று கேட்டால், அதில்தான் அர்த்தம் இருக்குமா? தமிழிசைக்காரர்களைப் பார்த்து “மற்ற வழிகளில் தமிழை வளருங்கள்!” என்று சொல்வதும் அவ்வளவு அர்த்தமான விஷயந்தான்.

தஞ்சாவூர் நாணுவின் “ஸாமகான விநோதினி” கிரவலைப்பற்றி இந்தப் பத்தியில் எழுதிய நாளிலிருந்து, அடிக்கடி பேச்சிலும் எழுத்திலும் கிரவலைப்பற்றிப் பிரஸ்தாபம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. செம்மங்குடியும் கிரவலைப்பற்றிப் பேசியிருக்கிறார். “கீழேயிருந்து மேலே தடாலென்று பாய்வது கிரவல் ஆகாது” என்று

தமிழர்கள் தினந்தோறும் ஆவலுடன்
எதிர்பார்த்து வந்த பத்திரிகை

# தினசரி

ஆசிரியர்: டி. எஸ். சொக்கலிங்கம்

## 1944 மே 24-ந் தேதி புதன்கிழமை
## வெளி வருகிறது

நூறு ஆண்டுகளுக்கு மேலாக தேசத்திற்கு அரிய தொண்டாற்றி இந்திய பத்திரிகையாளருக்கு அற்புத வழிகாட்டியாக இருந்து வரும் கல்கத்தா "அமிர்தபஜார் பத்திரிகா"வின் பிரபல ஆசிரியர்

**ஸ்ரீ துஷார் காந்தி கோஷ்**

"தினசரி"யை ஆரம்பித்து வைக்கிறார்

●

இவ்வைபவத்திற்கு
**டாக்டர் ஸி. ராஜகோபாலாச்சாரியார்**
— தலைமை வகிப்பார் —

★ முதலாளிகள் வஞ்சகத்தை வெறுத்து வெளியேறிய பத்திரிகையாளரின் முயற்சியின் பலனே இப் பத்திரிகை.

★ தமிழர்களின் ஆவலினாலும் அன்பினாலும் ஆதரவாலும் உதயமாகி யிருப்பதே "தினசரி" பத்திரிகை.

★ ஆணித்தரமான அபிப்பிராயத்திற்கும், நம்பிக்கையான செய்திகளுக்கும் தலை சிறந்து விளங்க வருவது "தினசரி"

★ உலகம் பூராவுமிருந்து சொந்த நிருபர்கள் அனுப்பும் செய்திகளையும், பிரபல எழுத்தாளரின் கட்டுரைகளையும் தாங்கி "தினசரி" வெளிவரும்.

நாள் தோறும் தமிழ் மக்கள் தவறாது படிக்க
வேண்டிய பத்திரிகையே "தினசரி."



# ஆடல் பாடல்



"கர்நாடகம்"

தேச பக்தர்கள் ஒவ்வொரு சமயம் தேச சேவையில் அலுப்படைந்து சும்மாவிருந்தாலும் இருப்பார்கள். ஆனால் தேசத் துரோகிகளினால் சும்மா இருக்க முடியாது; தேசத்தைப் படுகுழியில் தள்ளினால் ஒழிய அவர்களுக்குத் தூக்கம் வராது.

தாய்ப் பாஷையில் துவேஷம் கொண்டவர்களின் நிலைமையும் அப்படித்தான் என்று தோன்றுகிறது. தாய்ப் பாஷைத் துவேஷம் என்னும் விஷம் ஒருவருடைய இரத்தத்தில் ஏறிவிட்டால், அதைப்பற்றியே ஏதாவது பிதற்றிக் கொண்டிருந்தாலொழிய அவர்களால் வாழ்க்கை நடத்த முடியாது போலிருக்கிறது. தமிழிசை இயக்கத்தின் விரோதிகளின் காரியங்களிலிருந்து இது தெளிவாகிறது.

நாட்டில் தமிழிசை சம்பந்தமான விவகாரங்கள் எல்லாம் அடங்கி எல்லாரும் விவாதத்தையே மறந்திருக்கும் சமயத்தில் இவர்கள் யாரையாவது பிடித்துக்கொண்டு வந்து தமிழிசையைத் தாக்கி ஒரு பிரசங்கம் செய்ய வைக்கிறார்கள். அதிலிருந்து "அடியைப் பிடிடா பாரத பட்டா!" என்று விவகாரம் மறுபடியும் மூளுகிறது. சென்ற இரண்டு வருஷமாக இவ்விதம் அடிக்கடி நடப்பதைப் பார்த்து வந்திருக்கிறோம்.

இந்த வருஷத்துக்கு மேற்படி விவகாரத்தை அங்குரார்ப்பணம் செய்து ஆரம்பித்துவைத்த திருத்தொண்டைச் செம்மங்குடி சீனிவாசய்யர் செய்திருக்கிறார்.



செம்மங்குடியின் சங்கீத வித்வத்தில் எனக்கு அளவிலாத மதிப்பு உண்டு. அவருடைய சங்கீதக் கச்சேரிகளை நான் பரவசமாக அநுபவித்தது போல் வேறு யாருடைய கச்சேரியையும் அநுபவித்ததில்லை. இணையற்ற மனோதர்ம கற்பனைகளுடன் வாசாம கோசரமாக அவர் கரகரப்ரியா, கல்யாணி முதலிய ராகங்களை ஆலாபனம் செய்யும்போது நான் மெய்மறந்து போயிருக்கிறேன். நமது காலத்தில் கர்நாடக சங்கீதத்தின் மகிமைக்கு எல்லைக் கல் நாட்டக் கூடியவர் இவர்தான் என்று எண்ணி மகிழ்ந்திருக்கிறேன். இப்போது அவருடைய சாரீர வசதி குறைந்திருந்த போதிலும், அதனால் அவருடைய சங்கீதப் பெருமை குன்றிவிட்டதாக அநேகரைப்போல் நான் கருதவில்லை.

எனவே, அப்படிப்பட்ட வித்வான் சங்கீதத்தைப் பற்றியும் தமிழிசையைப் பற்றியும் பேச முன் வந்திருக்கும்போது, அவர் என்ன சொல்கிறார் என்பதைக் கவனிக்காமல் நான் தள்ள முடியாது.

செம்மங்குடியின் பேச்சில் ("ஹிந்து" பத்திரிகையில் வெளியாகியிருக்கிற பிரகாரம்) இரண்டு விஷயங்கள் எனக்கு மிகவும் திருப்தி அளிக்கின்றன. சங்கீத வித்தையைப் பணத்துக்கு விற்பதையும், டிக்கட் வசூலைக்கொண்டு மதிப்பிடுவதையும் அவர் வெறுக்கிறார். இது மிகவும் திருப்திகரமான விஷயம். இனிமேல் செம்மங்குடி பணத்துக்குக் கச்சேரி செய்வதையும், முக்கியமாக டிக்கட் வசூல் கச்சேரிகளில் பாடுவதையும் நிறுத்தி விடுவார் என்று நம்புகிறேன். இவ்விதம் செய்தால், கர்நாடக சங்கீதத்தின் பரமோபகாரி என்பதாக அவருக்கு ஒரு சிலை பண்ணி வைக்க வேண்டியதாகும்.

அடுத்தபடியாக, தனிப்பட்ட கச்சேரிகளில் பூராவும் தமிழ்ப் பாட்டுக்களாகவே பாடுவதற்குத் தாம் தயாரா யிருப்பதாகச் செம்மங்குடி தெரியப்படுத்தி யிருக்கிறார். இது மிகவும் சந்தோஷமான செய்தியாகும்.

தமிழிசை மகா நாட்டில் செம்மங்குடி பாட மறுத்த படியால் அவர்

ளுயிரம் ரூபாய் கொடுத்தால் ஏழு லட்சம் ஆகிவிடும்.

லட்சம் ரூபாய் கொடுக்கக்கூடிய முதலாளிகளும், பதினுயிரம் கொடுக்கக் கூடிய பணக்காரர்களும் தமிழ்நாட்டில் இருக்கத்தான் இருக்கிருர்கள்.

ஆனால், அவர்கள் கொடுக்க மாட்டார்கள்.

தமிழ் நாட்டில் பெரிய தர்மங்கள் செய்யும் பணக்காரர்கள் குறைவு: அவர்களும் செய்யும் தர்மங்களை ஒரு ஸர், அல்லது திவான்பகதூர் பட்டத்தையாவது மனதில் வைத்துக் கொண்டு செய்கிறவர்கள்.

தலைக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கக் கூடிய எழுநூறு பேர் நிச்சயமாகத் தமிழ் நாட்டில் இருக்கிருர்கள். ஆனால், அதற்கு வேண்டிய தாராள புத்தியுள்ளவர்கள் அவ்வளவு பேர் இல்லை.

எனவே, நூறு ரூபாய், ஐம்பது ரூபாய், பத்து ரூபாய், ஒரு ரூபாய் கொடுக்கக் கூடிய சாதாரண ஜனங்கள் தான் மேற்படி ஏழு லட்சம் ரூபாயையும் பெரும்பாலும் கொடுத்தாக வேண்டும்.

* * *

தமிழ் நாட்டுக் கஸ்தூரிபாய் நிதிக் கமிட்டிக்கு ஸர் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் தலைவர் என்று அறிந்து அளவற்ற மகிழ்ச்சி யடைகிறோம்.

மயிலாப்பூர் வக்கீல்களுக்குள்ளே ஸர் அல்லாடியைப் போன்ற கெட்டிக்காரர்களும், அவரைப் போல் பணம் சம்பாதித்தவர்களும் வேறு பலர் உண்டு. ஆனால், அவரைப் போன்ற கொடையாளி கிடையாது.

இடது கை அறியாமல் வலது கையால் அவர் அளித்த தர்மங்கள் பல.

அத்தகையவர் கஸ்தூரிபாய் நிதிக் கமிட்டிக்குத் தலைவரானது மிகவும் பொருத்தமாகும்.

நன்கொடை கொடுத்தே பழகிய அவருடைய கைகள் இப்போது நன்கொடை வாங்கி வாங்கி அலுத்துப் போகச் செய்ய வேண்டும்.

மணியார்டர்களிலும், செக்குகளிலும், கையெழுத்துப் போட்டுப் போட்டு அவருடைய கை ஓடியச் செய்ய வேண்டும்.

* * *

அன்னை கஸ்தூரி பாயை ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள்.

அவருடைய தூய வாழ்க்கையை, — தியாக வாழ்க்கையை, — ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள். தேச சேவை யாகிற பலி பீடத்தில் அவர் தம்மையே அர்ப்பணம் செய்ததை நினைவுப் படுத்திக் கொள்ளுங்கள்.

அவரிடம் நமது பக்தியின் அளவைக் காட்டும்படியாகச் சக்தி யானுசாரம் அவருடைய நிதிக்குப் பணம் கொடுங்கள்.

பணம் படைத்த பயனை அடைவதற்கு இதை விடச் சிறந்த மார்க்கம் வேறில்லை.

நன்கொடை அளிப்பதற்கு இதை விடச் சிறந்த தர்ம கைங்கரியம் வேறு கிடையாது.

மகாத்மாவினிடம் நமது பக்தியைக் காட்டிக் கொள்ள இதைவிட நல்ல வழி கண்டு பிடிக்க முடியாது.

நமது தேச பக்தி உண்மையான பக்தி யென்பதையும், நாம் சுதந்திரத்துக்குத் தகுதி யுடையவர்கள் என்பதையும் காட்டிக் கொள்ள இதைக் காட்டிலும் நல்ல சந்தர்ப்பம் ஏற்படவே ஏற்படாது.



உடனே, உங்கள் பணப் பையைத் திறவுங்கள்!

செக்கு புத்தகத்தைத் திறவுங்கள்!

மனதையும் சற்று தாராளமாய்த் திறவுங்கள்!

கொடுப்பதை உடனே கொடுங்கள்!

முதன் முதலில் தன் பங்கைக் கொடுத்த மாகாணம் என்ற பெருமையைத் தமிழ் நாட்டுக்கு அளியுங்கள்!

அதற்குப் பூர்வ ஜன்ம சுகிர்தம் இருக்க வேண்டும்.

கொடுப்பதற்கு வசதி இருந்தும் இந்த நிதிக்கு ஒருவர் பணம் கொடுக்க வில்லை யென்றால், அவர் மகா துர்ப் பாக்கியசாலியாக இருக்க வேண்டும்.

* * *

கஸ்தூரி பாயின் பெயரால் 75 லட்சம் ரூபாய் வசூலித்து மகாத்மாவின் 75-வது பிறந்த தினத்தில் அவரிடம் சமர்ப்பிக்கத் தீர்மானித்தபோது, அவ் விதம் நேரிலேயே மகாத்மாவிடம் சமர்ப் பிக்கும் சந்தர்ப்பம் கிடைக்குமா என்ற சந்தேகம் இருந்தது. அந்தக் கவலை இப்போது தீர்ந்து விட்டது. மலேரியா சுரம் வந்து மகாத்மாவை விடுதலை செய்து அந்தப் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டது.

அக்டோபர் 2உ மகாத்மாவிடம் நேரி லேயே 75 லட்சம் ரூபாயைக் கொடுத்து அவருடைய 75-வது பிறந்த தினத்தை நாம் கொண்டாடலாம்.

கஸ்தூரிபாய் அன்னையும் அன் றைக்கு சூக்ஷ்ம சரீரத்தில் வருவார்; மகாத்மாவின் பிறந்த தினக் கொண் டாட்டத்தையும் அதைப் பாரத மக்கள் நடத்தும் விதத்தையும் கண்டு மகிழ்வார்.

அந்தக் கொண்டாட்டத்தில் பங்கு பெறக் கொடுத்து வைத்தவர்கள் மகத் தான பாக்கியசாலிகள்.

* * *

காந்தி மகான் பெயரைச் சம்பந்தப் படுத்தி மற்றவர்கள் ஆரம்பிக்கும் காரி யங்களைச் சில சமயம் மகாத்மா விரும்புவதில்லை. ஆனால் இந்தக் கஸ்தூரிபாய் நிதி வசூலிக்கும் காரி யத்தை மகாத்மா பரிபூரணமாக அங்கீ கரித்திருக்கிறார். அதற்கு அறிகுறி யாக, மேற்படி நிதியின் பரிபாலன சபைக்குத் தலைவரா யிருக்க அவர் இசைந்திருக்கிறார்.

நிதியை எந்தக் காரியங்களுக்காக உபயோகப் படுத்தத் தீர்மானித்திருக் கிறார்களோ, அந்தக் காரியங்கள் மகாத்மாவின் மனதுக்குப் பெரிதும் உகந்தவையா யிருக்கவேண்டும். இல்லாவிடில் அவர் மேற்படி நிதிக் கமிட்டியின் தலைவர் பதவியை ஏற் றிருக்க மாட்டார்.

* * *

பிரசித்த பம்பாய் வைத்தியரான டாக்டர் ஜீவராஜ் மேதா மகாத்மா விடுதலை யடைந்த சமயத்திலேயே விடுதலை யடைந்தார். மகாத்மாவின் தேக நிலையை அவர் நன்கறிந்தவர். அவர் மகாத்மாவைப் பரிசீலனை செய்து பார்த்து விட்டு விடுத்திருக்கும் அறிக்கை பெரிதும் கவலை யளிப்ப தாகவே இருக்கிறது.

இருபத்தோரு நாள் உண்ணா விரதம் இருந்த பிறகு கூட மகாத்மாவின் தேக நிலை இவ்வளவு துர்ப்பலமாக இல்லை யென்று அவர் தெரியப் படுத்துகிறார்.

இரத்த ஓட்டம் குறைந்திருக்கிறது.

இருதயம் விரிந்திருக்கிறது.

வயிற்றில் கோளாறு இருக்கிறது.

சிந்தனா சக்தி குறைந்திருக்கிறது.

இப்படி யெல்லாம் படிக்கும்போது நமக்கு என்னமோ செய்கிறது.

இன்னும் சில வார காலத்துக்கு மகாத்மாவுக்கு எவ்விதத் தொந்தரவும் கொடுக்காமல் பரிபூர்ண ஓய்வு கொடுத் தால், அவர் ஆரோக்கியத்தையும் தேக பலத்தையும் பெற்று விடுவார் என்று டாக்டர் மேத்தா நமக்குத் தைரி யமும் கூறியிருக்கிறார்.

மகாத்மா குணமடைவதைத் துரிதப் படுத்துவதற்கு நாம் செய்யக் கூடியது ஏதாவது இருக்கிறதா?

இருக்கிறது.

மகாத்மாவைத் தரிசிக்கப் போயோ, கடிதம் எழுதியோ, தந்தி அடித்தோ, அழைப்புக்கள் அனுப்பியோ தொந் தரவு செய்யாமலிருப்பது ஒன்று.

இன்னொன்று, கஸ்தூரிபாய் நிதிக் குப் பணம் கொடுப்பது.

இந்த நிதியின் விஷயத்தில் மகாத்மா எப்போது சிரத்தை கொண்டிருக் கிறாரோ, அப்போது நிதிக்குப் பணம் வந்து குவிந்து கொண்டிருக்கிறது என்று கேட்கக் கேட்க, அவருடைய உள்ளம் உற்சாகமடையும்; அதற் கேற்பத் தேகமும் குணமடையும்.

* * *

கஸ்தூரிபாய் நிதிக்குத் தமிழ் நாடு ஏழு லட்சம் கொடுக்கவேண்டும் என்று ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

பணம் மலிந்திருக்கும் இந்தக் காலத் தில் ஏழு லட்சம் ரூபாய் தமிழ்நாடு கொடுப்பது பெரிய காரியமல்ல.

ஏழு முதலாளிகள்—ஜமீன்தார்கள்— பிரபுக்கள் — தலைக்கு ஒரு லட்சம் கொடுத்து ஏழு லட்சம் சேர்த்து விடலாம்.

அல்லது எழுபது பணக்காரர்கள்— பெரிய வியாபாரிகள் — தலைக்குப் பதி

# மனதைத் திறவுங்கள்!

சுதந்திரத்துக்கு நாம் தகுதியுடையவர்களா?

அல்லது அன்னிய ஆட்சியில் இன்னும் வெகு காலம் அவதிப்பட வேண்டுமென்பதுதான் நமது தலை எழுத்தா?

தேசம் என்றும், தேசபக்தி என்றும் நாம் பேசுவதில் ஏதேனும் உண்மை உண்டா?

அல்லது அவ்வளவும் வெறும் வேஷப் பேச்சா?

மகாத்மா காந்தி பிரிட்டிஷ் சிறையில் இருந்ததை நினைத்து நாம் உருகிக் கொண்டிருந்தோமே, அது உண்மையான உருக்கமா? அல்லது நம்முடைய கையினாலாகாத்தனத்தை மறைப்பதற்கான வஞ்சகமா?

அன்னை கஸ்தூரிபாய் சிறைச்சாலையில் மகாத்மாவின் மடியில் படுத்து உயிரை நீத்தார் என்று அறிந்தபோது நாம் கண்ணீர் விட்டோம்.

அது உண்மையான துயரக் கண்ணீரா?

அல்லது முதலைக் கண்ணீரா?

மகாத்மாவைச் சிறையில் வைத்ததற்காக, ஸ்ரீமதி கஸ்தூரிபாயைச் சிறையில் மரணமடையவிட்டதற்காக, பிரிட்டிஷ் சர்க்கார் மீது நாம் அளவற்ற கோபங்கொண்டோம்.

அது நிஜமான கோபமா?

அவ்விதம் கோபித்துக் கொள்வதற்கு நமக்கு உரிமை உண்டா?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடை தெரிவதற்கான ஒரு சந்தர்ப்பம் இப்போது ஏற்பட்டிருக்கிறது.

பாரதத் தாயின் தவப் புதல்வி, மகாத்மா காந்தியின் உத்தம பத்தினி, வாழ்நாளை யெல்லாம் பதியின் சேவையிலும் பரோபகாரத் தொண்டிலும் செலவிட்டவர், அந்தத் தொண்டுகளில் எல்லையற்ற கஷ்டங்களைப் பொறுமையுடன் அனுபவித்தவர் — இத்தகைய அன்னை கஸ்தூரிபாய் சிறையிலே காலமானபோது, தேசத்தில் இருந்த பெரியோர்கள் அந்தப் புண்ணியவதியின் பெயரால் ஒரு புனிதமான காரியத்தைச் செய்யத் தீர்மானித்தார்கள். அவருடைய ஞாபகார்த்தமாக 75 லட்சம் ரூபாய் நிதி வசூலிப்பதென்றும், இந்தத் தொகையை வரும் அக்டோபர் 2உ மகாத்மா காந்தியின் 75-வது பிறந்த தினத்தன்று அவரிடம் சமர்ப்பிப்பதென்றும் முடிவு செய்தார்கள். இந்தப் பணத்தை எப்படி உபயோகப் படுத்துவது என்பதையும் அவர்கள் நிர்ணயம் செய்தார்கள். தேசமெங்கும் அன்னை கஸ்தூரி பாயின் பெயரால் அபலை ஸ்திரீகளுக்கும் அநாதைக் குழந்தைகளுக்கும் வைத்திய சிகிச்சை, கல்விப் பயிற்சி முதலிய உதவிகள் அளிப்பதற்கு மேற்படி நிதியைப் பயன்படுத்துவதென்று தீர்மானித்தார்கள்.



மேற்கூறிய காரியத்தைக் காட்டிலும் சிறந்த தர்ம கைங்கரியம் வேறு கண்டு பிடிக்க முடியாது.

இந்த உத்தம தர்ம கைங்கரியத்துக்கு அன்னை கஸ்தூரி பாயின் பெயரைக் காட்டிலும் சிறந்த பெயரையும் கண்டு பிடிக்க முடியாது.

இப்பேர்ப்பட்ட புனித கைங்கரிய நிதிக்குப் பணம் கொடுப்பதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்.

-உம்மன்




தலை வலியும்....




....காய்ச்சலும்...




...தனக்கு வந்தால் தெரியும்.

# நிகழ்ச்சிச் சித்திரம்

## யார் முன்றுல் பேசுவது?




லண்டனில் நடந்து கொண்டிருக்கும் பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டு மந்திரிகள் மகா நாட்டிற்கு இந்தியாவின் பிரதி நிதிகளாக ஸர் பிரோஸ்கான் நூனும் காஷ்மீர் மகாராஜாவும் சென்றிருக்கிறர்கள்.

காஷ்மீர் மகாராஜா

# அன்னத்தின் வெண்மை

" ஆய்தூவி அன்னம் போல்
தூய்தாரும் வெண்மையிதே "

"காவேரி பார்" சோப்பினுல் வெளுக்கப்பட்ட ஆடைகளைப்பற்றி இம்மாதிரித்தான் நம் பெண்மணிகள் பேசிக்கொள்ளுகிறார்கள்.

ஆடைகளும் வீணுகாமல் சுத்தத்திலும் ஏற்றது "காவேரி பார்" சோப் —என்ற செய்தி இன்று ஆயிரக்கணக்கான இல்லங்களில் பரவி வருகிறது.




**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் தயாரிப்பு**

மானேஜிங் ஏஜெண்டுகள் : சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட், திருச்சினுப்பள்ளி

மேற்கண்ட பூரண விற்பனையாளர்களிடமிருந்தோ அல்லது அடியிற்கண்ட ஊர்களிலுள்ள அவர்களது விநியோகஸ்தர்களிடமிருந்தோ சரக்குகள் கிடைக்கும்.

**தி அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் லிமிடெட்.,**

120, அரமனைக்காரத் தெரு, ஜி. டி. சென்னை. திருச்சினுப்பள்ளி, மேட்டூர் அணை.

பெங்களூர், பெஜவாடா, கள்ளிக்கோட்டை, கோயமுத்தூர், கடப்பை, குண்டூர், மதுரை, பாலக்காடு, தஞ்சாவூர், திருநெல்வேலி, திருச்சூர், திருவனந்தபுரம், விசாகப்பட்டணம், ஹைதராபாத் ( டெக்கான். )



# கல்கி


மலர் 3 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 32


# என்ன சேதி?

## மழை எந்தக் கட்சி? ●

மகாபாரத யுத்தத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் உதவியை இரு கட்சியினரும் கோரினார்கள் என்று படித்திருக்கிறோம். அம்மாதிரியே இன்று அஸ்ஸாமில் வருண பகவானின் உதவியை இரு சாராரும் கோருவதாகத் தெரிகிறது. அது மட்டுமல்ல; "மழை எந்தக் கட்சி?" என்ற விவாதமும் நடந்து வருகிறது. "மழை வந்தால் எங்களுக்குத்தான் சாதகம்!" என்று ஜப்பானியர் உரிமை கொண்டாடினார்களாம். "இல்லவே இல்லை! எங்களுக்குத்தான்!" என்று பிரிட்டிஷ் யுத்த நிபுணர் ஒருவர் மிகவும் சிரமப்பட்டு நிரூபிக்க முயன்றிருக்கிறார். ஆகவே, இராஜாங்க அபிமானமுள்ள வைதிக கோஷ்டிகளுக்குத் தங்களுடைய இராஜ பக்தியைச் செயலில் காட்ட ஓர் அருமையான சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. நாடெங்கும் அவர்கள் வருண ஜபமும், யாக யக்ஞங்களும் நடத்தி அஸ்ஸாமில் பெய்கிற மழையை ஜப்பானுக்கு விரோதமாகவும், நமக்குச் சாதகமாகவும் பெய்யும்படி வேண்டிக் கொள்ளட்டும்!

## வெடி மருந்து பத்திரம்! ●

ஆனால், நம்மைப் பொறுத்த வரையில் "மழையையே முழுதும் நம்பியிருந்துவிட வேண்டாம்! கைவசமுள்ள வெடி மருந்து நனைந்து ஈரமாகாமல் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று தளபதி வேவலைக் கேட்டுக் கொள்கிறோம். இந்தக் காலத்து யுத்தங்களில், பிரதான வெடி மருந்தாகக் கருதப்படுவது, பொது ஜனங்களின் உற்சாகமே யாகும். அந்த உற்சாகமாகிய வெடி மருந்தை உற்பத்தி செய்வதும், குறையாமல் பார்த்துக் கொள்வதும் மிகவும் முக்கியமான யுத்த முயற்சிகளில் சேர்ந்தது. மகாத்மாவின் விடுதலையினால் தேசத்தில் ஏற்பட்டிருக்கும் உற்சாகம் குறையாமல் மேலும் வளர்வதற்கு வேண்டிய முயற்சிகளை வேவல் சர்க்கார் மேற்கொள்ள வேண்டும்.

## பத்திரிகைகளுக்கு நஷ்டம் ●

யுத்த காலத்தில் பத்திரிகைகளுக்குச் சர்க்கார் மேலும் மேலும் ஏற்படுத்திய நிர்ப்பந்தங்களினால் பத்திரிகைக்காரர்கள் அடைந்த தொல்லைகளைச் சொல்ல முடியாது! சென்னையைப் பொறுத்த வரையில், மேற்படி தொல்லைகள் அதிகமாகப் பத்திரிகைக்காரர்களைப் பாதிக்காதபடி செய்து வந்தவர் ஸ்ரீ வி. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியார். வெகு காலம் பத்திரிகைத் தொழில் செய்து அநுபவம் பெற்றவராதலால், இவர் சென்னை சர்க்காரின் 'ஸ்பெஷல் பிரஸ் அட்வைஸர்' உத்தியோகத்துக்கு நியமிக்கப்பட்டபோது, பத்திரிகைக்காரர் எல்லாருமே திருப்தியடைந்தார்கள். அதற்கேற்ப, ஸ்ரீ வி. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியாரும் மேற்படி உத்தியோகத்தை நிர்வகித்து வந்தார். தம்மால் முடிந்த வரையில் பத்திரிகைகளுக்குச் சங்கடங்கள் நேராமல் தடுப்பதற்கே பார்த்தார். அத்தகையாருடைய எதிர்பாராத மரணம் சென்னைப் பத்திரிகைக்காரர்களுக்கு ஏற்பட்ட பெரு நஷ்டமாகும். அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் அவரைப்போல் சிநேகிதர் கிடைப்பது அருமை என்று சொல்வார்கள். அவருடைய மூத்த சகோதரரான மகாகனம் சீனிவாச சாஸ்திரியாருக்கும் மற்றும் அவருடைய குடும்பத்தாருக்கும் நமது மனமார்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# கல்கி

## பொருளடக்கம்

மலர் 3 }
இதழ் 32 }

1944 மே 21

{ தாரண ௵
{ வைகாசி 8



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.




தமிழ் நாட்டுக்குப் பெருமை அளிக்கும் கலைச் செல்வம் வாய்ந்த பெண்மணிகளில் இன்று ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் ஒருவராக விளங்குகிறார். ஒரு காலத்தில் நாடக மேடையில் இணையற்ற புகழுடன் தோன்றி வந்தவர். இன்று கர்நாடக சங்கீத மேடையில் பிரபல மடைந்திருக்கிறார். தேசியப் பற்றும், காந்தி பக்தியும், கதர் அபிமானமும் கொண்ட ஸ்ரீமதி கே. பி. எஸ். பதினாறு வருஷத்துக்கு முன்பு பண்டித மோதிலால் நேருவைப் பற்றிப் பாடிய இசைத் தட்டானது தமிழர்கள் வாழும் இடங்களிலெல்லாம் அவர் பெயர் பிரபலமடையும்படி செய்தது. அவரே இன்றைய தினம் அன்னை கஸ்தூரி பாயின் ஞாபகார்த்தமாக "உனை மறந்திடப் போமோ?" என்று தொடங்கும் பரிவுப் பாட்டை இசைத் தட்டில் பாடியிருக்கிறார். ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் நீடூழி வாழ்ந்து தமிழ் நாட்டுக்கும் இசைக் கலைக்கும் சிறந்த தொண்டு செய்து வருவாராக! ஆனால் இனிமேல் இம்மாதிரி பரிவுப் பாட்டை அவர் பாடும்படியான சந்தர்ப்பம் தேசத்தில் நேராமலிருக்கட்டும்.